கிக்கொண்டிருக்கிற பிரபஞ்சத்தைப் பிரகாசரூபமாயிருக்கிற பரமபதமாக வேதாந்தப்பிரமாணத்தினால் பார்க்கிறவன் உடனேமோக்ஷமடைகிறான். தேகத்தினிடத்தில் ஆத்மஞானம் (உறுதிப்பட்டிருப்பது)போல தேகாத்தும ஞானத்திற்கு விரோதியானஞானம் ஆத்மாவினிடத்தில் எவனுக் குண்டாகிறதோ அவன் விரும்பாவிட்டாலும் மோக்ஷமடைகிறான். சத்தியஞானாநந்த பூர்ணலக்ஷணமாயும் அக்ஞானத்திற்கு புறம்பானதாயு மிருக்கிற பிர்ம்மாநந்தத்தை எப்போதும் பார்க்கிறவன் கருமத்தினாலெப்படிகட்டுப்படுவான். மூன்று (ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி) அவஸ்தைகளுக்கு சாக்ஷியாயும் சத்தியஞானாநந்த லக்ஷணமுடையதாயும் நான் என்கிற பதங்களுக்கு லக்ஷ்யார்த்தமானதாயும் யாதொரு தோஷங்களுக்கும் சம்பந்தப் படாததாயும் எங்கும் பரவினதாயும் சச்சிதானந்தமாயு மிருக்கிற பிர்ம்மத்தை ஞானக்கண்ணுள்ளவன் பார்க்கிறான்.

. பிரகாசித்துக்கொண் டிருக்கிற சூரியனை குருடன் பாராததுபோல அக்ஞானி (பிர்மத்தை)ப்பார்க்கிறதில்லை. பிரக்ஞானமே (ஞானசுவரூபமே) பிர்ம்மம். அது சத்திய ஞானத்தை லக்ஷணமாக வுடையது. இப்படி பிர்மத்தைச் செவ்வையா யறிகிறதினாலே மனிதன் அமிருதனாகிறான். ஆநந்தமாயும் இருமையற்றதாயும் குணங்களற்றதாயும் சத்தியமானதாயும் சித்கனமாயு மிருக்கிற அந்தப் பிர்ம்மத்தை தன்னாத்தும சுவரூபமாக அறிந்தவன் ஒன்றிலிருந்தும் பயமடைகிறதில்லை. சின்மாத்திரமாயும் எங்கும் பரவியதாயும் நித்தியமாயும் சம்பூர்ணமாயும் சுகரூபமாயும் நாசமற்றதாயு மிருக்கிறதுதான் உண்மையான பிர்ம்மம். அதைத்தவிர வேறொன்றுமில்லை யென்பதுதான் பிர்ம்மஞானிகளுடைய இருப்பு. உலகமானது குருடனுக்கு இருட்டாயும் நல்ல கண்ணுள்ளவனுக்கு பிரகாசமாயு மிருப்பதுபோல அக்ஞானிக்குத் துக்க சுவரூபமாயிருக்கிற உலகமானது ஞானிக்கு ஆநந்தமயமாயிருக்கிறது. அநந்தனாயும் சித்கனாநந்தனாயு மிருக்கிற வராகரூபியான, என்னிடத்தில் அத்துவைத பாவனை (இரண்டாவதில்லை என்கிற எண்ணம்) இருந்ததேயானால் பந்தமேது? விடுபடுகிறவன்யார்? சகலமான தேகத்தையுடையவர்களுடைய (ஜீவர்களுடைய) சுவசுவரூபமோ எப்போதும் சின்மாத்திரம்தான். கண்ணுக்குக் காணப்படுகிற குடம்போல் தேகாதி சங்காதங்கள் (தேகம் முதலாயுள்ள தத்துவக்கூட்டங்கள்) இல்லவேயில்லை. ஆத்மாவைவிட அந்நியமாகத் தோற்றுகிற சராசரப் பிரபஞ்சங்களை உன்னுடைய ஆத்மாவாகவே அறிந்து "அது நானாகவிருக்கிறேன்" என்று பாவனை செய். (அப்படி பாவனைசெய்கிறவன்) சுவசுவரூபத்தைத் தானே யனுபவிக்கிறான். தன்னைக் காட்டிலும் போக்கிய (அனுபவிக்கத்தக்க) வஸ்து வேறில்லை: இருக்கிறதென்கிற வஸ்து இருக்குமானால் அப்படியிருக்கிற லக்ஷணத்தை யுடையது பிர்ம்மந்தான். பிர்ம்ம ஞானத்தை விசேஷமாயுடையவன் பிரசித்தமா யிருக்கிற ஜகத்தை எப்போதும் பார்த்துக்கொண்டிருந்தாலும் தன் ஆத்மாவைக் காட்டிலும் அந்நியமாகப் பார்க்கிறதில்லை. என்னுடைய சுவரூபத்தைச் செவ்வையாய் அறிகிறதினாலே கருமங்களினால் கட்டப்படுகிறதில்லை. சரீரேந்திரியங்களில்லாததாயும் சர்வசாக்ஷியாயும் பரமார்த்த ஏகவிக்ஞானமாயும் (உத்தம பிரயோஜனமானதாயும் ஒன்றாயும் ஞானசுவரூபமாயும்) சுகாத்துமாவாயும் சுவப்பிரகாசமாயு மிருக்கிற பிர்ம்மத்தையும் சகலத்தையும் (சகல பிரபஞ்சத்தையும்) தன்னுடைய சுவரூபமாக சுவானுபவத்தினாலே எவன் அறிகிறானோ அவன் தைரியமுள்ளவன். அவன் நானேயென்று அறிந்துகொள்ளப்பட வேண்டியவன். ஓ ரிபுவே! நீ அவனாகக் கடவாய். இதற்குப் பிறகு பிரபஞ்சானுபவ மெப்பவுமில்லை; எப்போதும் சுவரூப ஞானானுபவம் தான். இந்தப்படி ஆத்மாவை பரிபூர்ணமாயறிந்தவன் பந்தத்திலிருந்து விடுபட்டவனுமல்ல. பெத்தனுமல்ல; சர்வசாக்ஷியாய் நர்த்தனம் செய்துகொண்டிருக்கிற என்னை ஒரு முகூர்த்தகாலம் சுவசுவரூபானுசந்தானத்தினாலே எவன் தியானிக்கிறானோ அவன் சகல பந்தத்திலிருந்தும் விடுபடுகிறான். சகல பூதங்களுக்குள்ளேயிருக்கிறவனாயும் நித்தியமுக்த சிதாத்மாவாயும் பிரத்தியக் சைதன்னியமாயும் (ஜீவாத்துமாவாயும்) இருக்கிற என் பொருட்டாகவே நமஸ்காரம், நமஸ்காரம். ஓ தேவதே! நீ நானாகவிருக்கிறாய். நான் நீயாக விருக்கிறேன். அநந்தனாயிருக்கிற உன்பொருட்டும்

என்பொருட்டும் சிதாத்துமாவா யிருக்கிற என் பொருட்டு முன்பொருட்டும் பரேசனா யிருக்கிற என் பொருட்டும் மங்கள சுவரூபி யாயிருக்கிற உன்பொருட்டும் நமஸ்காரம். நான் செய்யவேண்டுவதென்ன? நான் போக வேண்டிய தெங்கே? நான் கிரகிக்கவேண்டியதெது? நான் தள்ளவேண்டிய தெது? (ஒன்றுமில்லை; என்னத்தினாலென்றால்,) மகாப்பிரளய ஜலத்தினால் போல பிரபஞ்சம் என்னால் நிறைந்திருக்கிறது. உள்ளபிமானம் வெளியபிமானம் தேகாபிமானம் இவைகளை எவன் விடுகிறானோ சகலசங்கத்தி (சேர்க்கை) லிருந்தும் விடுபட்ட அவன் என்னையே அடைகிறான். இதில் சந்தேகமில்லை. பாம்பைப்போல ஜனக்கூட்டத்தை எப்பவும் விட்டிருக்கிறவனையும் சோபனமாயிருக்கிற ஸ்திரீயை சவம் போலவும், மூடிவற்றதாயிருக்கிற விஷயம் முதலியவைகளை விஷத்தைப்போலவும் நினைக்கிறவனையும் காமங்களை விட்டவனையும் வைராக்கிய முள்ளவனையும் ஜகத்திலிருக்கிற பரமஹம்சன் எவனோ அவன் வாசுதேவனாகிய நானே; இது சத்தியம், இது சத்தியம். இந்தசத்தியமே இப்போது சொல்லப்படுகிறது. சத்தியமான பரபிர்ம்மம் நான், என்னைத்தவிர வேறே யாதொன்றுமில்லை.”

“உபவாசமென்பது ஜீவாத்ம பரமாத்மாக்களுடைய சமீபவாசமேயன்றி தேகத்தை வறட்டுகிற விரதமல்ல. தேகத்தை வறளச் செய்வதனால் அவிவேகிகளுக்கு என்ன பிரயோசனம்? புத்தை யிடித்ததனால் பெரிய பாம்பைக் கொன்றுவிட்டதாக ஆகுமா? பிரம்ம மிருக்கிறதென்று அறிந்தாலது பரோக்ஷஞானம் (கண்ணுக்கு காணப்படாமல் ஒரு பிரமமிருக்கிறதென்கிற ஞானம்) ஆகிறது. நானே பிரம்மமென்று அறிந்தால் அது சாக்ஷாத்காரமென்று சொல்லப் படுகிறது. யோகியானவன் தன் ஆத்மாவைக் கேவலம் (பூர்ணம்) ஆக எப்போது அறிகிறானோ அது முதல் ஜீவன்முக்தனாகிறான். நானே பிரம்மமென்று (அஹம்ப்ரஹ்மஇதி) எப்போதுமிருப்பது மகாத்துமாக்களுக்கு மோக்ஷஹேதுவானது. பந்த மோக்ஷங்களுக்கு இரண்டு வாக்கியங்களிருக்கின்றன. என்னுடையது (விஷயாபிமானம்) என்பதும், என்னுடையதல்ல (அபிமானமின்மை) என்பதுந்தான். என்னுடையதென்பதினால் (ஜந்து) கட்டப் படுகிறான். என்னுடையதல்லவென்பதினால் விடுபடுகிறான். வெளிச்சிந்தையும் செய்யக் கூடாது அப்படியே உட்சிந்தையும் (செய்யக் கூடாது.) ஓ ரிபுவே! சகல சிந்தையும்விட்டு சுவஸ்தமாக உன் ஆத்மசுவரூபத்திலேயே திருப்தியடைந்து இரு.”

“ஜகத் முழுவதும் சங்கற்ப (மனத்தோற்றம் அல்லது எண்ணம்) மாத்திரத்தினாலேயே யுண்டாகிறது. சங்கற்ப மாத்திரத்தினாலேயே ஜகத்தோற்றம். சங்கற்ப மாத்திரமாயிருக்கிற ஜகத்தைவிட்டு நிர்விகல்பத்தை (விகாரமற்றதை) ஆசிரயித்து என்னுடைய ஸ்தானத்தை மனதில் பாவனைசெய். ஓ மகா புத்திசாலியே! என் சிந்தனமும் என் கீர்த்தனமும் என்னைக்குறித்து ஒருவருக்கொருவர் சம்பாஷணையும் செய்துகொண்டு என்னையே சருவசிரேஷ்டமா யுடைத்தானவனாகி காலத்தைப்போக்கு. பிரபஞ்சத்தில் * சித்திருக்கிறதென்பது † சின்மாத்திரந்தான்; இந்த பிரபஞ்சமானது ‡ சின்மயந்தான்; நீயும் சித்துத்தான்; நானும் சித்துத்தான்; இந்த லோகங்களும் சித்தென்றே பாவனைசெய். ஆசையை நிராசையாக்கு. எப்போதும் பற்றற்றவனாகி இரு. அக்ஞானத்தினாலுண்

* சித் என்றால், அறிவு; அல்லது, அறிவுவிளங்குகிறதற்கும் சொல்லலாம். ஜீவனை சித் என்று வியவகிரிப்பதுண்டு. ஆகையால், எது பிரகாசிக்கிறதோ, எது இருக்கிறதென்று சொல்லப்படுகிறதோ, அவைகளை எல்லாம் சித் என்று சொல்லலாம்.

† சின்மாத்திரமென்றால், பிரம்மமே. எதெதுசித்தாக சொல்லப் படுகிறதோ அவைகளெல்லாம் பிர்மத்தைத் தவிர வேறல்ல.

‡ சின்மயமென்றால், பிரபஞ்சம் முதலான சகலமும் பிர்மமயமென்றே கொள்ளத்தக்கது. எப்படி என்றால், ஒரே தங்கமானது பல ஆபரணங்களாய்ச் செய்யப்பட்டு பல பெயர்களையடைந்திருந்தாலும் பல பெயருள்ள அந்த ஆபரணங்கள் முழுமையும் தங்கமயமே அன்றியில் வேறல்லனபோல, சிருஷ்டியாயிருக்கிற சகல பிரபஞ்சமும் பிர்மத்தினுடைய சக்தியைத் தவிர வேறல்ல என்று சொல்லியிருக்கிற சுவேதாசுவதரோபநிஷத் ௬-வது அத்தியாயம். ௨-வது மந்திரத்தையும், நாரதபரிவிராஜகோபநிஷத் ௬-வது உபதேசத்தையும் பார்க்க.

டான கருத்திராதி காரகத்தினாலே † யுண்டான கருமத்தினால் சுருதிமூலமாயுண்டான ஆத்ம விஞ்ஞான பிரகாசமான தீபம் எப்படி பாதிக்கப்படும்? தேகமே ஆத்மாவென்பதை விட்டு ஜகத் விபவகாரத்தில் விகாரமற்றவனாய் ஒரே நிஷ்டையாயிருக்கும் நிலைமையினாலே உள்ளேயிருக்கிற ஞானத்தில் மாத்திரம் ஆசையுள்ளவனாக ஆய்விடு. மஹாகாசத்தில் ‡ கடாகாசம், படாகாசம்போல சிதாகாசமாயிருக்கிற என்னிடத்தில் ஜீவேசுவரர்கள் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். (ஜீவேசுவரர்களாகிய) ஆத்மாவின் சிருஷ்டிக்கு முந்தி எதானது இல்லையோ, அப்படியே முடிவிலும் எதானது தள்ளப்பட்டதோ, அதானது மாயையென்று விவேகத்தினாலேயே பிர்ம்மஞானிகளால் சொல்லப்படுகிறது. மாயையும் அதின் காரியமும் § நசித்துப் போனால் ஈசுவரதத்துவமுமில்லை; ஜீவதத்துவமுமில்லை. ஆகையினாலே * நிருபாதிகமான ஆகாசம்போல் நான் சுத்தனாகவும் சித்தாகவுமிருக்கிறேன்.

ஈக்ஷணம் [1] முதல் பிரவேசம் வரையிலுள்ள ஜீவேசுவராதி ரூபமாகிய சேதனாசேதனாத்மகமாகிய சிருஷ்டியானது ஈசுவரனாலே கற்பிக்கப்பட்டது. ஜாக்கிரத் முதல மோக்ஷம் வரையிலுள்ள சம்சாரமானது ஜீவனாலே கற்பிக்கப்பட்டது. திருணாசகம் [2] (ஒருவித யக்ஞம்) முதல் யோகம் வரையிலுள்ள கருமங்கள் ஈசுவரப் பிராந்தியை ஆசிரயித்தவைகளாகவிருக்கின்றன. லோகாயதம் (ஒருமதம்) முதல் சாங்கியம்வரையிலுள்ளவைகள் (மதங்கள்) ஜீவப்பிராந்தியை ஆசிரயித்தவைகளாயிருக்கின்றன. ஆனபடியினாலே முமுக்ஷுக்களினாலே ஜீவேசுவரவாதத்தில் புத்தியை ஒருபோதும் செலுத்தத்தகாது. நிச்சலமாயிருந்துகொண்டு பிர்ம்ம தத்துவம் விசாரிக்கத் தகுந்தது. இரண்டாவதற்றதாகிய பிர்ம்ம தத்துவத்தை எப்படியிருக்கிறதோ அப்படி அறியாதவர்களெல்லோரும் பிராந்தர்கள்தான். அவர்களுக்கு முக்தியேது? இவ்விடத்தில் (பிரபஞ்சத்தில்) சுகமேது? அவர்களுக்கு [3] உத்தமாதம பாவங்கள் (உயர்ந்தது தாழ்ந்தது என்கிற எண்ணங்கள்) இருந்தால் அதினாலென்ன? சுவப்னாவஸ்தை சம்பந்தமான இராஜ்ஜியாதிபத்தியமும் பிக்ஷை வாங்குதலும் ஜாக்கிரதவஸ்தையில் ஒட்டுமா? புத்தியானது அக்ஞானத்தில் லயமடைந்தபோது அது நித்திரையென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது. அக்ஞானமும் அதின் காரியமுமில்லா என்

† எக்ஞத்தில் எஜமான் ரித்துவிக்குகள் ஹோதா முதலானவர்கள் கருத்திராதி. எக்ஞத்தை செய்விக்கிறவன் காரகன். அதினாலுண்டானது கருமம்.

‡ கடாகாசம் என்றால், எங்கும் நிறைந்திருக்கிற ஆகாசமானது குடத்துக்குள்ளும் இருக்கிறது. அது குடத்துக்குள்ளிருக்கிற ஸ்திதியில் அது கடாகாசமென்று சொல்லப்படுகிறது. அப்படியே, அந்த மகாஹாசமானது வீட்டுக்குள்ளிருக்கும் ஸ்திதியில் அது மடாகாசமென்று சொல்லப்படுகிறது.

§ மாயையினாலுண்டான பிரபஞ்சம் மாயையின்காரியமென்று சொல்லப்படுகிறது. மண்ணினாலுண்டான குடத்தை மண்ணின் காரியமென்று சொல்வதுபோல.

* குடமும் வீடும் இல்லாதபோது ஆகாசமானது குடத்திலிருக்கிறதென்றும் வீட்டிலிருக்கிறதென்றும் சொல்ல இடமில்லையாகையால் அப்படிப்பட்ட நிலைமை நிருபாதி என்று சொல்லப்படுகிறது. குடம் வீடு இருக்கிற நிலைமை உபாதி என்று சொல்லப்படுகிறது.

1 சாந்தோக்கியோபநிஷத் ஆறுவது பிரபாடக உ-ந-வது கண்டங்களில் அந்த தேவன் ஈக்ஷணம்=யோசித்து, அக்கினி முதலியவைகளை சிருஷ்டித்து அவைகளில் பிரவேசித்து என்கிறவரையில் சொல்லியிருக்கிறதைப் பார்க்க.

2 இந்த எக்ஞத்தின் விவரத்தை கடோபநிஷத் முதலாவது வல்லியில் காண்க.

3 ஈசுவரன் சர்வக்ஞனாகையால் சிரேஷ்டனாகவும் ஜீவன் கிஞ்சிக்ஞனாகையால் இவன் தாழ்ந்தவனென்றும் எண்ணமிருந்ததினால் மட்டும் பிரயோஜனமில்லை. உலகத்தில் இன்னது உயர்ந்தது. இன்னது தாழ்ந்தது என்று கொள்ளும் எண்ணம் அக்ஞானத்தினால்தான், சகலமும் பிரம்ம சுவரூபமென்றும் பிரம்மத்திற்கு அன்னியமானது ஒன்றுமில்லையென்றும், பிரம்மக்ஞானிகள் சமமாய் பார்ப்பதினால் அவர்களுக்கு உயர்வு தாழ்வு என்பது கிடையாது.

னிடத்தில் நித்திரை எப்படியுண்டாகும்? புத்தியானது மலர்ந்திருக்கிறபோது அது ஜாக்ரத் (விழித்திருத்தல்) என்று சொல்லப்படுகிறது. எனக்கு விகாரம் முதலியவையில்லாததினால் ஜாக்ரதவஸ்தை இல்லை. சூக்ஷ்ம நாடிகளிலே புத்தியினுடைய சஞ்சாரமானது சுவப்னமாகிறது; சஞ்சார தருமமற்ற என்னிடத்தில் சுவப்னமில்லை. தமஸினாலே (அக்ஞானத்தினாலே) சூழப்பட்ட சுஷுப்திகாலத்தில் சகலமும் லயித்திருக்கையில் (பிரகிருதியில் அடங்கியிருக்கையில்) காணத்தக்கவனல்லாதவனாய் (தன்) சுவரூபமாகிற மகாநந்தத்தை அனுபவிக்கிறான். சகலத்தையும் வித்தியாசமில்லாமல் சித்தாகவே எவன் பார்க்கிறானோ அவன் விசேஷ ஞானமுடையவன். அவன்தான் சிவன். அவன்தான் ஹரி. அவன்தான் பிர்ம்மா. இந்த பிரபஞ்சத்தில் நீண்ட சுவப்நமெதுவோ, நீண்ட சித்தப்பிரமை எதுவோ, நீண்ட மனோராஜ்ஜியமெதுவோ, அதுதான் தக்கக்கடலான சம்சாரம். தூங்கி விழித்ததுமுதல் மறுபடி தூங்குகிறவரையில் பிர்ம்மமொன்றையே சிந்திக்கவேண்டியது. * ஆரோபிக்கப் பட்டிருக்கிற ஜகத்தை லயப்படுத்துவதினால் சித்தம் என் சுவரூபமாயாகிறது. நம்முடைய பெரிதான அரிஷட்வர்க்கங்களைக் † கொன்று அவைகளுடைய நாசத்தினாலே மிகவும் சிரேஷ்டமான யானையாகிறான் (யானைகளுக்கெல்லாம் சிரேஷ்டமான யானையைப்போலாகிறான்). இந்தச் சரீரமானது இப்போது நசித்தாலும் சந்திர நக்ஷத்திரங்களுள்ள வரையிலிருந்தாலும் அதினால் சிந்தையே தேகமாகவுடைய எனக்கு விசேஷமென்ன? குடமானது நசித்தால்தான் என்ன? வெகுகாலமிருந்தால் தானென்ன? குடத்திலிருக்கும் ஆகாசத்திற்கு விசேஷம் அற்பமாவதில்லை.

பாம்பினால் நீக்கப்பட்டதும் உயிரற்றதுமான பாம்புச்சட்டையானது புத்திலிருக்கையில் பாம்பானது அதில் அபிமானத்தைப் பாராட்டுகிறதில்லை. இப்படியே (ஞானி) ஸ்தூலதேகத்தையும் சூக்ஷ்மதேகத்தையும் மதிக்கிறதில்லை. மித்தியாஞானமானது (ஜகத் சத்தியமென்கிற தப்பு ஞானமானது) அதின் காரணத்துடன் (ஸமூலமாய்) ஆத்மஞானமாகிற அக்னியினால் நாசமடைந்தால் (நேதி, நேதி) இதல்ல, இதல்ல என்கிற நிஷேத ரூபத்தினால் இந்த ஞானியானவன் சரீரமற்றவனாகிறான். சாஸ்திரத்தினாலே (பிரபஞ்சம்) வாஸ்தவமென்கிற ஞானம் நசித்துப் போகிறது. அபரோக்ஷஞானத்தினால் (பிரபஞ்ச வியாபாரமாகிற) விவகார யோக்கியத்துவம் நசித்துப்போகிறது. பிராரப்தநாசத்தினால் பிரபஞ்சத் தோற்றம் நசிக்கிறது. மாயையானது இப்படி மூன்றுவிதமாய் நாசத்தையடைகிறது. தனக்குள்ளே பிர்ம்மபாவத்தைச் சேர்க்காமலே (ஜீவபிர்ம ஐக்கியம் செய்யாமல்) போனால் ஜீவபாவம் போகிறதில்லை. உண்மையான அத்துவைதம் அறியப்பட்டதானால (விஷய) வாசனை போய்விடுகிறது. (வாசனையற்றால்) பிராரப்தம் போனபின் தேகம்வருகிறதில்லை. இவ்விதமாய் மாயை முழுவதும் நசித்துப்போகிறது நிச்சயம். ஜகத்திருக்கிறதென்றால் (அப்படி) இருக்கிறதென்பது சத்ரூபமான பிரம்மமே. ஜகத் விளங்குகிறதென்றால், அப்படி விளங்குகிறது பிரம்மம்தான். பாலைநிலத்தின் தோற்றமான ஜலம முழுதும் பாலை பூமியேயன்றி வேறில்லை. தன் சுவரூப விசாரத்தினால் இந்த மூன்றுலோகமும் (சுவர்க்க மத்திய பாதாளம்) சித்சுவரூபமாத்திரமே. ஜீவன், ஈசுவரன், குரு இப்படிப்பட்ட கதைக்கு வெகுதூரத்திலிருக்கிற ஏகாந்த கேவல சிதேகரஸ சுவபாவமான பிரம்மத்தினிடத்தில் அஞ்ஞானமே இல்லை. (அப்படியிருக்க) ஜகத்தினுடைய பிரஸ்தாபமேது. பரிபூர்ணமாகவேயிருக்கிற (அந்த) பிர்மம் நானாகவிருக்கிறேன். பூர்ண விக்கிரகமாயிருக்கிற ஞானமாகிய சந்திரனானவன் மோகமாகிற இராகுவினாலே அபகரிக்கப்பட்ட தேஜஸையு

* நிர்க்குணமாயும் இரண்டாவதற்றதாயும் இருக்கிற பிர்ம்மத்தினிடத்திலிருப்பதுபோல் சொல்லப்படுகிறது. அப்படி சொல்லுகிறதுதான் ஆரோபிதம். இந்தப் பொய்யான ஆரோபிதத்தைத் தள்ளிவிடுவதினால் சித்தமானது பிர்ம்ம சுவரூபமாய்விடுகிறது. என்றால், சித்தத்தையுடைய ஆத்மா சித்தம் முதலானது நசித்து பிர்ம்ம சுவரூபமாக ஆகிறானென்பதுகருத்து.

† காம, குரோத, லோப, மோஹ, மத, மாச்சரியங்கள்தான் அரிஷட் வர்க்கங்களென்று சொல்லப்படுகின்றன.

டைத்தாயிருக்கையில் மோசனம் வரையில் செய்கிற ஸ்நானதானயக்ஞம முதலிய கிரியைகள் வீணானது. ஜலத்தில் உப்பைச்சேர்த்தால் (வேறாகக் காணப்படாமல்) சமமாய்ப் போவதுபோல ஆத்மாவும் மனதும் ஐக்கியமானல் அது சமாதி என்று சொல்லப்படுகிறது. சத்குரு கிருபையன்றியில் விஷயங்களைத் தள்ளிவிடுவதும் துர்லபம்; தத்துவ தரிசனமும் (உண்மையான வஸ்துவை யறிவதும்) துர்லபம்; ஸகஜாவஸ்தையும் (தன்சுவசுவரூபமாகவிருத்தலும்) துர்லபம்.

ஞானசக்தி உதயமானவனும் சகல கருமங்களையும் விட்டவனுமிருக்கிற யோகியினுடைய ஸகஜாவஸ்தை (சுவஸ்வரூபமாயிருக்கும் நிலைமை) யானது தானாகவே பிரகாசிக்கிறது. * இரஸ (பாதரஸம்) த்திற்கும் மனதிற்கும் சலித்துகொண்டிருக்குமதன்மை சுவபாவமாயுள்ளது. இரஸமானது கட்டப்பட்டாலும் மனது கட்டுதலையடைந்தாலும் பூமியிலே எதுதான் சித்திக்கமாட்டாது. மூர்ச்சையடைந்தவன் வியாதியைப் போக்கடிக்கிறான். மரணமடைந்தவன் தானே உயிர்ப்பிவிக்கிறான். கட்டுப்பட்டவன் ஆகாசத்தில் சஞ்சரிக்குதலையடைகிறான். இரஸமும் மனதும் பிர்மத்துவத்தை யுடையன. † இந்திரியங்களுக்கு எஜமானன் மனது. மனதுக்கெஜமானன் வாயு. வாயுவுக்கெசமானன் லயயோகம். ஆகையினாலே, லயயோகத்தை ஆசிரயிக்கத்தக்கது; போகிகளுக்கு லயயோகமானது சேஷ்டை (செய்கை) யில்லாததாயும் மாறுதலற்றதாயும் விளங்கிக்கொண்டிருக்கிறது. சகலமான சங்கற்பங்களையும் தள்ளிவிட்டதாயும் சகலமான சேஷ்டைகளை முழுதும் விட்டதாயும் வாக்குக்கெட்டாததாயுமிருக்கிற மனோலயமானது தானே அறிந்துகொள்ளத்தக்கது. சங்கீத தாளலய வாத்தியங்களுக்கு சுவாதீனமாயிருந்தாலும் ஆட்டக்காரியானவள் தலைமேலிருக்கிற குடத்தை சம்ரக்ஷணைசெய்கிற விஷயத்தில் புத்தியுடையவள்போல், கூட்டங்கூட்டமாயிருக்கிற விஷயங்களைப் பார்த்துக்கொண்டு அதற்கு சுவாதீனமாயிருந்தாலும், யோகியானவன் பிர்மத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற புத்தியைவிடுகிறதில்லை. சகலமான சிந்தையையும் விட்டு விட்டு சாவதானமான மனதுடன் யோகசாம்பிராஜியத்தை யிச்சிக்கப்பட்டவனாலே நாதமே (யோகத்தினலுண்டாகும் துவனி) அநுசந்தானம் செய்யத்தக்கது.

(இரண்டாமத்தியாயம் முற்றிற்று.)

---

* இந்த அடையாளமுதல் † இந்த அடையாளம் வரையிலுள்ள வாக்கியங்களுக்கு அர்த்தமென்ன
வென்றால்: இவ்விடத்தில் ரஸம், மனது, இவைகள் ஒன்றுக்கொன்று உபமானமாய்க் காட்டப்படுகிறது.
எப்படி என்றால், ரஸமானது சலித்துக்கொண்டிருக்கிற ஸ்வபாவமுடையது; அப்படியே மனதும். ரஸம்
கட்டப்பட்டால் என்றால், சித்தர்கள ரஸத்தின ஸ்வபாவமான சலனத்தை சில மூலிகைகளால் நிறுத்தி
ரஸகுளிகைசெய்து அதை உண்பதினால் உலகத்தில் எவ்விடத்திலும் போகவும் இஷ்டமான வைகளை
அடையவும் கூடுமாகையால், ரஸம் கட்டப்பட்டால் பூமியில் எதுதான் சித்திக்கமாட்டாதென்று சொல்லப்
பட்டது. அப்படியே மனதை ஒரே இடத்தில் நிறுத்திச் செய்கிறதாகிய இதின் ஐந்தாவது அத்தியாயத்
தில், காலவஞ்சன மென்கிறயோகசித்தியடைந்தவன் இச்சிததெல்லா மடைகிறானென்று சொல்லப்பட்
டிருப்பதால் மனதை அடக்கினவனுக்கு பூமியில் எதுதான் சித்திக்கமாட்டாது. ரஸம் மூர்ச்சையடைந்தா
லென்றால், சில மூலிகைகளினால் ரஸம் சுத்திசெய்யப்படும்போது அதின்சலனமற்றுப்போகிறது. அந்த
ஸ்திதி 'மூர்ச்சை' என்று சொல்லப்பட்டது. அந்த ஸ்திதியில் அது வியாதிஸ்தர்களுக்குக் கொடுக்கப்பட்
டால் வியாதியைப் போக்கும். அப்படியே மனது சலிக்காமல் ஒரே நிலையில் நிறுத்திக்கொண்டிருக்கிற
யோகிக்கு வியாதி அணுகாது. மரணமடைந்தவன் தானே உயிர்ப்பிவிக்கிறான் என்றால், ரஸமானது
மூலிகைகளினால் பஸ்மம் செய்யப்பட்டால் அந்த பஸ்மமானது உயிர்போகும் நிலைமையிலிருக்கிற பிராணி
களைக்கூட உயிர்ப்பிவிக்கும். அப்படியே மனது நாசமடைந்தால், ஆத்ம சுவரூபத்தைப் பிரகாசிப்பிக்கும்;
கட்டுப்பட்டவன் ஆகாசத்தில் சஞ்சரித்தலையடைகிறானென்றால், ரஸத்தைக்கட்டி அதனால் செய்யப்பட்ட
குளிகையினால் சித்தாதிகள் ஆகாசமார்க்கத்தில் சஞ்சரிக்கிறார்கள். அப்படியே மனதைக்கட்டினவன்
சிதாகாசத்தில், அதாவது-பிர்ம்மாநந்த சுவரூபத்தில் சஞ்சரிக்கிறான். என்றால், ஆனந்தத்தை அடைகி
றான். ரசமும் மனதும் பிர்மத்துவத்தை யுடையன வென்றால், ரஸத்தைச சுவாதீனம் செய்து கொண்ட
வன் எங்கும (பிர்ம்மமென்கிறபதத்தி வர்த்தப்படிக்கு) வியாபிக்கிற சக்தியுடையவனாகிறான். அப்படியே
மனதைச் சுவாதீனம் செய்துகொண்டவன் பிர்ம்மமாகிறான். அல்லது ரஸத்தைக் கட்டினவன் ஆகாசத்
தில் சஞ்சரிக்கிறான். மனதைக் கட்டினவன் பிர்ம்மமாகிறானென்றாவது அர்த்தமாகலாம்.

## ௯-வது அத்தியாயம்.

ஒரு வஸ்துவானது யாதொருகாலத்திலும் பல சுவரூபமாக வாகமாட்டாது அகண்டமாய் (இடைவிடாததாய்) இருக்கிறேனாகையால் என்னைத்தவிர வேறே யாதொன்றுமில்லை. எதெது காணப்படுகிறதோ, எதெது கேட்கப்படுகிறதோ அவைகளெல்லாம் பிர்ம்மத்தைத்தவிர வேறேயாயிருக்கவில்லை. நித்தியமாயும் சுத்தமாயும் விமுக்தமாயும் ஏகமாயும் அகண்டானந்தமாயும் அத்துவயமாயும் சத்தியமாயும் ஞானமாயும் அநந்தமாயுமுள்ள பரபிர்ம்மமெதுவோ அதுவே நானாகவிருக்கிறேன்; நான் ஆனந்தரூபன், அகண்ட ஞானமுள்ளவன்; ஸர்வசிரேஷ்டன்; பிரகாசமான சித்தனன்; ஆகாசத்தை மேகம் எப்படித் தொடுகிறதில்லையோ அப்படிச் சம்சார துக்கங்கள் என்னைத் தொடமாட்டா. துக்க நாசத்தினால் சகலமும் சுகமென்றும் அசத்து நசிப்பதனால் சகலமும் சத்ரூபமென்றும் அறி. சித்ரூபம்தான் தோற்றப்பட்ட பிரபஞ்சத்தோடு கூடியது. ஆனபடியினாலென் ரூபமானது அகண்டமானது. உத்தமனான யோகிக்குப் பிறப்பிறப்புப் போக்குவரத்துமில்லை.

அறிவுமில்லை. சகல (பிரபஞ்ச) மும் அழுக்கோடு கூடினதுமல்ல; சுத்தமுமல்ல; சின்மயமாக பிரகாசித்துக்கொண்டிருக்கிறதாக விளங்குகிறது. சத்தியசித்கன அகண்டாத்துவயமாயும் திருசியமல்லாததாயும் (இந்திரியங்களாலறியப்படுகிறதல்லாதது) கல்மஷமற்றதாயும் சுத்தமாயும் இரண்டாவதற்றதாயும் மங்களகரமாயுமிருக்கிற தெந்தப் பிர்ம்மமோ அது நானென்று (அது நீயே என்று) எப்போதும் மௌனத்தை ஆசிரயித்துக்கொண்டிரு. பிறப் பிறப்பு சுகதுக்க மற்றது, ஜாதிநீதி (விதி) குலகோத்திர மற்றது, ஜகத்திற்கு * விவர்த்தோபாதான காரணமாயுமிருக்கிற தெதுவோ அந்த சித் நானென்று ஆசிரயம் செய். பூர்ணமாயும் இரண்டாவதற்றதாயும் அகண்டமான சேதனமாயும் பிரபஞ்சபேத சம்பந்தாதிகளற்றதாயும் அத்துவிதீய பரசச்சிதம்சகம் (அம்சமுடையது) ஆயுமிருக்கிற அந்த பிர்ம்மம் நானே (நீயே) என்று எப்போதும் மௌனத்தை ஆசிரயி.

ஒன்றினாலேயும் பாதிக்கப் படாததனாலே முக்காலத்திலும் ஒரே ரூபமாயிருக்கிறதும் எப்போதுமுள்ளதும் எதுவோ அது எப்போதுமிருக்கிற என்னுடைய சத்ரூபம். உபாதியற்று நித்தியமாயிருக்கிறவும் சுஷுப்தியிலுள்ள சகலசுகத்தைக் காட்டிலும் சிரேஷ்டமாயிருக்கிறவுமான இந்த சுகசுவரூபத்துவமுங் கூட என் ஆநந்தத்துவம் தான். சூரிய கிரணங்களினாலே பெரிதான இருட்டு சீக்கிரம் நாசமடைவதுபோல பெரிதான ஜனனத்திற்குக் காரணமான இருட்டு ஹரியாகிற சூரிய காந்தியினாலே சீக்கிரத்தில் நாசமடைகிறது: வேறொன்றினாலுமல்ல. என்னுடைய பாத

* உபாதான காரணம் மூன்றுவிதப்படும். அதாவது, ஆரம்போபாதானம் பரிணாமோபாதானம் விவர்த்தோபாதானம் என்பவைகளே. துணிக்கு நூல் உபாதானகாரணம். நூல் துணியானதினால் நூலின் சுவரூபத்தில் மாறுதலன்றி பழைய சுவரூபத்திலிருந்துகொண்டே துணியாகவுமாகியிருக்கிறது. ஆகையாலிது ஆரம்போபாதானம்.

தயிருக்குக்காரணம் பால். அந்தக் காரணமான பால் தன் சுவரூபம் மாறி தயிராகவாச்சுது. ஆகையாலிது பரிணாமோபாதானம்.

கயிற்றினிடத்தில் பாம்பென்கிற தோற்றமுண்டாச்சுது; ஆனால் வாஸ்தவத்தில் கயிறு பாம்பாகவுமில்லை, கயிற்றில் பாம்புமில்லை. அப்படி யுண்டான தோற்றம் தப்பாயிருந்தாலும் பிரமையிருக்கிறவரை வாஸ்தவமாய் பாம்பென்றே நம்பப்படுகிறது. இப்படியுண்டான பிரமைக்கு ஆதாரம் கயிறுதான்; ஆகையால் கயிறு விவர்த்தோபாதானம்.

பிர்ம்மமானது ஜகத்திற்கு விவர்த்தோபாதானம்தான். ஏனென்றால், ஆரம்போபாதானமானால் ஜெகத்தானது பிர்ம்ம சுவரூபமாகவே காணவேண்டும். அப்படிக்காணவில்லை. பரிணாமோபாதானமென்றால், சுவரூபம்மாறி வேறொரு சுவரூப மடையவேண்டும்; மாறாத சுவபாவமுடையதே பிர்ம்மம். மேலும் தயிர் பாலாகாதது போல பிர்ம்மம் சுவசுவரூபத்தை யடையவும் கூடாததாகும். ஆகையால், பரிணாமோபாதானமல்ல; விவர்த்தோபாதானமே. அதாவது, கயிற்றில் பாம்பை அஞ்ஞானத்தினாலாரோபிப்பதுபோல பிர்ம்மத்தினிடத்தில் ஜகத்தானது ஆரோபிக்கப்படுகிறது.

ஸ்மரணையினாலும் பூஜையினாலும் பிராணியானவன் தன்னுடைய அஞ்ஞானத்திலிருந்து விடுபடுகிறான். மரண ஜனனங்களுடைய நாசத்திற்கு ஏதுவானது என்னுடைய பாதஸ்மரணை தவிர வேறொன்றுமில்லை. பண இச்சையுள்ளவன் பணக்காரனை எப்படி ஸ்தோத்திரம் செய்கிறானோ அப்படிப்போல் ஜகத்திற்குக் கருத்தாவாயிருக்கிறவனை ஆதரவோடு ஸ்தோத்திரம் செய்தால் எவன்தான் பெந்தத்திலிருந்து விடுபடமாட்டான். சூரியனுடைய சந்நிதியினாலே லோகம் தானாகவே சேஷ்டிக்கிறது (லோகவியாபாரம் நடக்கிறது) போல என்னுடைய சந்நிதியினாலேயே சகலமான லோகமும் சேஷ்டிக்கிறது. கிளிஞ்சலில் வெள்ளி எப்படி (அக்ஞானத்தினால்) கற்பிக்கப்படுகிறதோ அப்படிப்போல என்னிடத்திலேயே மாயாமயமான மஹதாதி ஜகத்தானது மாயையினாலே கற்பிக்கப்படுகிறது. சண்டாள தேகத்திலேயும் பசுவாதி தேகங்களிலேயும் ஸ்தாவரத்திலேயும் பிராம்மண சரீரத்திலேயும் மற்றவைகளிலேயும் தாரதம்மிய மிருக்கிறதுபோல் நான் அப்படியிருக்கவில்லை. திக்குப்பிரமை நிவிருத்தி யானவனுக்குங் கூட முன்போல் (திக்குப்பிரமையிருந்த காலத்தில்போல்) திக்குவிளங்குவதுபோல விஞ்ஞானத்தினால் நாசமடைந்த ஜகத்தானது எனக்கு விளங்கிக்கொண்டிருக்கிறது. ஆனால், அந்த ஜகத்தில்லை. நான் தேகமுமல்ல, இந்திரியங்களுமல்ல, பிராணனுமல்ல, மனதுமல்ல, புத்தியுமல்ல, அகங்காரமுமல்ல, சித்தமுமல்ல, மாயையுமல்ல, ஆகாசம் முதலான ஜகத்துமல்ல, கருத்தாவுமல்ல, போக்தாவுமல்ல, அப்படியே புஜிப்பிக்கிறவனுமல்ல, ஜனார்த்தனனாகிய கேவலம் சித் சதானந்த பிரம்மமாகவே யிருக்கிறேன்.

ஜலத்தினுடைய அசைவினாலேயே சூரியனுக்கு அசைவு எப்படியோ அப்படி அகங்கார சம்பந்தத்தினாலே ஆத்மாவுக்கு சமுசார முண்டாயிருக்கிறது. சம்சாரமானது சித்தத்தை மூலமாயுடையது. அதைப் பிரயத்தினத்தினால் சேதிக்கவேண்டும். இந்தச் சித்தத்தினுடைய மகத்துவத்தில் உனக்கு விசுவாசமென்ன? ஆச்சரியம்! இராஜாக்களுடைய தனங்களெங்கே? பிரும்மாக்களெங்கே? ஜகத்துக்களெங்கே? புராதனங்கள் போய்விட்டன. எத்தனையோ சிருஷ்டிகளாய்விட்டன. எத்தனையோ கோடிப் பிரும்மாக்கள் போய்விட்டார்கள். எத்தனையோ ராஜாக்கள் தூளிகள்போல் போய்விட்டார்கள். ஞானியா யிருக்கிறவனுக்குங் கூட அசுரசுபாவத்தினாலே தேகாபிமான முண்டாகலாம். ஞானியாயிருக்கிறவனுக்கு அசுரசுவபாவ முண்டானால் அவனறிந்திருக்கிற தத்துவதரிசனமானது நிஷ்பலமாகிறது. உற்பத்தியாகிற ஆசைமுதலானவை விவேகஞானமாகிற அக்கினியினாலே எரிக்கப்பட்டுப் போனால் மறுபடி முளைக்கிறதேது. நல்ல புத்திசாலியா யிருக்கிறவன் பிறருடைய தோஷத்தைக் கண்டுபிடிப்பதில் சந்தோஷமடைவதுபோல் தன்குற்றத்தைக் கண்டுபிடிப்பானானால் எவன்தான் பெந்தத்திலிருந்து விடுபடமாட்டான். ஓ! முனீசுவரா! ஆத்மஞானமில்லாதவனும் முக்தனல்லாதவனும் (அணிமாதி) சித்திகளை இச்சிக்கிறான். திரவியம் மந்திரம் கிரியை காலம் யுக்தி இவைகளினாலே அந்த சித்தியை யடைகிறான். ஆத்மஞானமுள்ளவனுக்கு அவை (சித்திகள்) விஷயமல்ல. ஆத்மஞானியானவனும் ஆத்மாவிலேயே பார்வையை யுடையவனும் ஆத்மாவினாலே (மனதினாலே) ஆத்மாவிடத்திலே திருப்தி யடைந்தவனும் அவித்தையை அநுசரித்துப் போகிறதில்லை. ஜகத்திலெங்கெந்த வஸ்துக்களுண்டோ அவைகளை அவித்தியா சுவரூபங்களாய் (ஆத்மஞானிகள்) அறிகிறார்கள். அவித்தையைவிட்ட ஆத்மஞானி அவைகளில் எவ்விதமாய் முழுகுவான். திரவிய மந்தர கிரியா கால யுக்திகள் நல்லசித்தியைக் கொடுக்கப்பட்டவைகளானாலும் அவைகளொன்றும் பரமாத்துமபதத்தை அடைகிற விஷயத்தில் உபகாரம் செய்யமாட்டா. சகல இச்சைகளுடைய வியாபாரமும் அடங்கியிருக்கச்சே ஆத்மஞானி என்கிற பெயரை யுடையவனையும் மனதேயில்லாதவனையுமிருக்கிற அவன் சித்தியை இச்சிக்கிற விஷயத்தில் எப்படி அருகனாவான்.

(மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.)

---

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE).

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

By *Sri Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

## நாடகபாத்திரங்கள்.

### புருஷர்கள்.

விலேசவர்மன்—உதயபுரிராஜா.

ஹேமசந்திரஸிங்—விலேசவர்மாவின் தமையனாகிய இறந்தபோன ஹேமசந்திரவர்மாவின் குமாரன்—பட்டத்துக்கு இளவரசன்.

புலஸ்தியவர்மா—ராஜாவின் அந்தரங்க காரியதரிசி.

ஸூரிராஜஸிங்—இளவரசனுடைய தோழன்.

லக்ஷ்மணஸிங்—புலஸ்தியவர்மாவின் குமாரன்.

வருணமித்ரன், கிருஷ்ணதாசன், உக்கிருத்திரப்பிரதாபன், கடோர்க்கஜசேனன், ஆலவரிசன் } ஆலோசனை சபையோர்.

பிருகத்சேனன், மார்க்கசேனன் } சேனை உத்தியோகஸ்தர்கள்.

வீரசேனன்—அரண்மனைக்காவல் சிப்பாய்.

பிரதாபஸிங்—ஜோதிபுரி ராஜ்யத்து இளவரசன்.

ராதாகிருஷ்ணன்—புலஸ்தியவர்மாவின் வேலைக்காரன்.

### ஸ்திரீகள்.

ஜோதிமஹால்—ஹேமசந்திரவர்மாவின் விதவை: ஹேமசந்திரஸிங்குக்குத் தாய்; தற்காலம் விலேசவர்மாவின் மனைவியாகிய இராணி.

உத்பலாக்ஷி—புலஸ்தியவர்மாவின் மகள்.

### இதரர்கள்.

புரோகிதர்கள், பிரபுக்கள், சேனாதிபதிகள், சிப்பாய்கள், நாடகக்காரர்கள், தூதர்கள், சேவகர்கள், தோட்டிகள், ராஜஸ்திரீகள், பெருமாட்டிகள், முதலியோர்கள்.

இறந்தபோன ஹேமசந்திரவர்மாவின் பிதிருதேவதை.

ஸ்தலம் } ராஜபுத்திர சமஸ்தானம். உதயபுரி பட்டணம்.

காலம்:—டில்லி சக்ரவர்த்திகளின் காலம்.

"The blessed gods in servile masks
Plied for me my household tasks."—*Emerson.*

"The World means intensely, and means good;
To find out its meaning is my meat, and drink."
—*Robert Browning.*

"If you are in need of the fruit of my labour,
I am in greater need of the labour itself,
I perish of rust and rest."—*Emerson.*

காக்ஷி 2:

{ இடம்:—அரண்மனை உப்பரிகையில் ஒரு கொட்டகை.
காலம்:—இரவு முதல் ஜாமம்.

(ஹேமசந்திரஸிங்கும் நாடகக்காரர்களும் வருகிறார்கள்.)

ஹேமசந்:—நான் எழுதிக்கொடுத்த வாக்கியங்களை நாவிலிடறாமல் நான் உச்சரித்துக் காட்டியதுபோல் செவ்வனச்சொல். சாதாரண வேஷக்காரர்கள் செய்வதுபோல் கையைக் காலை வீசிக்கொண்டாவது ஹாஹா என்று கத்திக்கொண்டாவது ஆர்ப்பாட்டம் செய்கிறதாயிருந்தால், இந்த வாக்கியங்களையெல்லாம் பறையறையும் கிராமத் தோட்டிகளுக்குச் சொல்லிக்கொடுத்துப் பாராமல் ஒப்புவிக்கச் சொல்லுகிறேன். அப்படியிராமல் எப்பொழுதும் அமரிக்கையாய் ஸந்தர்ப்பத்துக்குத் தக்கபடி நிறுத்தவேண்டிய இடத்தில் நிறுத்தியும் உரத்துச் சொல்லவேண்டியதை உரக்கவும், சற்று நிதானித்துச் சொல்லவேண்டியதை நிதானமாகவும் சொல். ஏனெனில் சோகம் கோபம் முதலிய ரஸம் மேலிட்டு முற்றிப்போய்ச் சுழல்காற்றுப்போலும் சமுத்திரகோஷம்போலும் மனதை பலாத்காரமாய் இழுத்துக் கொண்டுபோகிற இடத்திலும், அந்த ரஸத்தின் மர்மத்தை சூக்ஷ்மமாய் அறிந்து வசப்படுத்தி அதன் மனோபாவத்தைச் சிறிதேனும் வேற்றுமையின்றி நம் மனோபாவமாகச்செய்து ஐக்கியப்படுத்தினால்தான், நம்முடைய பேச்சும் அபிநயங்களும் கிளிப்பிள்ளையின் பேச்சையும் குரங்கின் சேஷ்டையையும் போலிராமல் சுபாவமாயிருக்கும். சில வேஷக்காரர்கள்

பெண்பிள்ளைவேஷம் போட்டுக்கொண்டு மூக்கினால் பேசுவதையும், ராக்ஷஸவேஷம் போட்டுவிட்டால் உடனே நிஷ்காரணமாய்த் துள்ளிக்குதித்துப் பல்லைக்கடித்துக் கதறுவதையும் பார்த்தால் எனக்கே வெட்கமாயிருக்கிறது, பரிதாபமாயுமிருக்கிறது. இப்பேர்ப்பட்டவர்களைத்தான் பாமர ஜனங்களும் 'சபாஷ்' என்று உத்ஸாஹப்படுத்தி சீர்திருத்தக்கூடாத மடையர்களாக்கிவிடுகிறார்கள்.

அந்தமாதிரி வழக்கங்களையெல்லாம் நீங்கள் விட்டுவிடுங்கள்.

முதல் நாடகக்காரன் :—அப்படியே செய்கிறோம் மகாராஜ்.

ஹேமசந் :—அதற்காகப் புதிய நாட்டுப்பெண்போல், சொல்லுகிறது காதில்விழாமலும் இருக்கிற இடந்தெரியாமல் மறைவில் பதுங்கிக்கொண்டுமிருக்க வேண்டாம். எல்லாம் சமயோசிதமாயிருக்கட்டும் - சொல்லுக்குத்தக்க செயலும் செயலுக்குத்தக்க சொல்லுமாயிருக்கவேண்டும். முக்கியமாய்க் கவனிக்கவேண்டியதென்னவெனில் சுபாவத்துக்கு விரோதமாகவாவது சுபாவத்தை அதிக்கிரமித்தாவது ஒன்றும் செய்யக்கூடாது.

அப்படிச்செய்தல் கலைமகளை உபாஸிக்கும் ஸங்கீத ஸாஹித்ய சிற்பசாஸ்திரிகளுக்கழகல்ல. அவர்கள் தொழிலெல்லாம் தானற்று, கண்ணாடிபோல் தெளிவாயிருந்துகொண்டு, உள்ளதை உள்ளபடி அதனதன் அந்தரங்க உண்மை வெளிப்பட உணர்த்திக்காட்டுவதே! சற்றேறவுங்கூடாது குறையவுங்கூடாது—அழகாயிருப்பவனுடைய அழகை எல்லோரும் அப்படியே கண்டு ஆநந்திக்கவும், விகாரமாயிருப்பவனுடைய கோரத்தை எல்லோரும் உள்ளபடியே கண்டு வெறுக்கவும் செய்ய வேண்டும். ஆட்டம் முடிந்தபிறகு ஜனங்களெல்லாம் "திரௌபதி வேஷம் போட்டவன் நன்றாய் ஆடினான்" என்றால், அதுவே அவன் நன்றாய் ஆடவில்லை யென்பதற்கடையாளம். அப்படியில்லாமல் வேஷம்போட்டவனைப்பற்றி ஒன்றும் பேசாமல் "திரௌபதியின் பொறுமை என்ன பொறுமை; என்ன பக்தி," என்று திரௌபதியைக் கொண்டாடுவார்களேயானால் அப்பொழுதுதான் அவன் வேஷம் பலித்ததென்று நான் சொல்வேன். சாதாரண பாமர ஜனங்களை சந்தோஷிப்பித்தால் போதுமென்பவர்களுக்கு இந்த உபதேசமெல்லாம் வேண்டியதில்லை. அவர்களை சந்தோஷிப்பித்தல் பெரிய காரியமுமல்ல. நாம் சிரித்தால் அவர்களும் சிரித்துவிடுவார்கள். நல்ல ஆபரணங்களணிந்து நல்ல உடை உடுத்திருந்தால் அவர்களுக்கு அதுவே போதும்—அப்படியில்லாமல் உண்மையான வித்வான்களை திருப்தி செய்கிறதென்றால் அது கொஞ்சம் கடினம். ஆனால் தீரனாயிருப்பவன் அவர்களுடைய அபிப்பிராயத்துக்குத்தான் மதிப்புவைத்து அவர்கள் திருப்தியையேதான் நாடுவான். கடைசியில் சுருக்கிச்சொல்லின், சபையோர் எதிரில் தானிருந்தும் இல்லாததுபோல் அவர்கள் தன்னைக் கவனியாது மறந்து சரீரத்தின் ஆநந்தரசத்தில் மூழ்கும்படி செய்வதுதான் நாடகக்காரன் கடமை. அதுதான் எப்படி முடியுமென்றால், இவனும் எதிரிலிருக்கும் சபையோரைக் கவனியாது அவர்கள் இல்லாததுபோல் பாவித்து அவர்கள் இல்லாவிட்டால் தான் எப்படி நடந்துகொள்வானோ அப்படியே அந்தச் சரித்திரத்தின் ரஸத்தில் தானும் மெய்மறந்து மூழ்க வேண்டும். அதாவது சபையோர் மனமும் தன் மனமும் தங்களை மறந்து மூன்றாவதான பொதுப்பொருளில் லயிக்கவேண்டும். உபதேசங்களின் ரகஸியமும் இதுதான்.

நாடகக்காரன் :—பிறந்தது முதல் நாடகத்திலேயே பழகினவர்கள்கூட இவ்வளவு நன்றாய் உபதேசிக்கமாட்டார்கள் சுவாமி! எங்களால் கூடியவரையில் இப்படியேதான் அனுஷ்டித்து வருகிறோம் என்று நினைக்கிறேன்.

ஹேமசந் :—இன்னும் முற்றிலும் அனுஷ்டிக்கவேண்டுமென்றுதான் நான் சொல்லுகிறேன்—விதூஷகவேஷம் போடுகிறவன் தனக்குத் தோன்றியபடியெல்லாம உளறாமல் அவனுடைய பாகத்துக்கு எவ்வளவு பேசவேண்டியதோ அதைமட்டும் பேசிவிட்டு சும்மா இருக்கட்டும். நல்லது! போய் சீக்கிரப்படுத்துங்கள்!

(நாடகக்காரர்கள் போய்விடுகிறார்கள்.)

(புலஸ்தியவர்மா, கடோர்க்கஜசேனன், உக்கிரருத்திரப்பிரதாபன், மூவரும் வருகிறார்கள்.)

ஏனையா, ராஜா அவர்கள் இந்த ஆட்டத்தைப் பார்க்க வருகிறாரா?

புலஸ்தி:—ராணியாரும்கூட வருகிறார்கள் சுவாமி! இதோ வந்துவிடுவார்கள்.

ஹேமசந்:—ஆட்டக்காரர்களை சீக்கிரம் தயாராய் இருக்கச்சொல்லுங்கள். (புலஸ்திபவர்மா போய்விடுகிறான்.) நீங்களும் போய் அவர்களுக்கு வேண்டிய உதவியை தயவுடன் செய்கிறீர்களா?

கடோர்க்: } அப்படியே சுவாமி! (இருவரும் போய்விடுகிறார்கள்)
உக்கிர : }

ஹேமசந்:—ஐயா, ஹரிராஜ சுவாமிகளே! (ஹரிராஜவிங் வருகிறான்.)

ஹரிராஜ:—இதோ இருக்கிறேன். தங்களுக்கு என்ன வேண்டும், மகாராஜ்!

ஹேமசந்:—இப்படிச் சற்று உட்காருவோம். என் உள்ளத்தைத் தங்களிடத்தில் வெளியிட்டுச் சொல்லுகிறேன். எனக்குமட்டும் எப்பொழுதும் தங்களைக் கண்டால் ஓர் வித திருப்தி உண்டாகிறது—எப்பொழுதும் தங்களோடுகூடவே இருந்தால் போதுமென்று தோன்றுகிறது—ஏனெனில் தாங்கள் எப்பொழுதும் ஒரேமாதிரியாய் இடிவிழுந்தாலும் நிலைகலையாது நிதானம் தவறாதிருக்கிறீர்கள். எப்பொழுதும் எல்லாரிடத்தும் சாந்தமாய் இனிமையாயிருக்கிறீர்கள். தாங்கள் எப்பொழுதும் அமிர்தம் உண்டவர்போல் பூர்ண திருப்தியாயிருக்கிறீர்கள். அதனால் தாங்கள் இருக்கும் அறைமுழுவதும் நிறைந்திருக்கிறது. தங்களைப் பார்த்தால் அதிர்ஷ்டம் துரதிர்ஷ்டம் இரண்டையும் பழிப்பவர்போலிருக்கிறது.

ஹரிராஜ:—இதற்குத்தான் கூப்பிட்டீர்களா? இன்னும் ஏதாவது சொல்லவேண்டியதிருக்கிறதா?

ஹேமசந்:—இல்லை சுவாமி! நான் ஸ்தோத்திரம் செய்வதாக நினைக்கவேண்டாம். தங்களை ஸ்தோத்திரம்செய்து எனக்கு என்ன ஆகவேண்டும்? ஐசுவரியம், அதிகாரம், செல்வாக்குள்ளவர்களை ஸ்தோத்திரம் செய்தால் பயனுண்டு. தங்களிடத்தில் என்ன இருக்கிறது? மனதை அதுபோனபடியெல்லாம் விட்டுவிட்டுத் திண்டாடாமல் நிதானபுத்தியும் மனஉறுதியும் கைவிடாமல் அதை அடக்கி ஆளுகிறவனைக் காட்டுங்கள்-நான் அவனைக்கோவிலில் வைத்துக் கும்பிடுகிறேன். நானும் என்னால் கூடியவரையில் அப்படியிருக்க முயலுகிறேன்—சரிப்பட்டுவரவில்லை.

ஹரிராஜ:—எல்லாம் காலக்கிரமத்தில் தானாகக்கிடைக்கும் சுவாமி! அதுவரையில் தாங்கள் மட்டும் அதைரியப்படாமல் வந்த வேலையைச்செய்து கொண்டிருங்கள்-நானும் அவ்வளவுதான் செய்கிறேன்.

ஹேமசந்:—அந்த வேலைதான் இன்னதென்று தெரியவில்லை-கடமை, கடமை என்று வெகுசுலபமாய்ச் சொல்லி விடுகிறார்கள்-அந்தக் கடமை தான் என்னவென்று தெரியவில்லை.

ஹரிராஜ்:—எந்தவேலை நம்முயற்சியில்லாமல் யதிருச்சையாய் நமக்குள்ளிருந்தாவது வெளியிலிருந்தாவது வந்து சேருகிறதோ அதுதான் நம்கடமை-உள்ளிருந்து வந்தால் அது ஒருவித உத்ஸாகத்தைக் கொடுக்கும்; அதைச்செய்வதில் சிரமமிராது. அது தான் அது நம்கடமை என்பதற் கடையாளம்-வெளியிலிருந்து வரும்வேலையும் அதேமாதிரி உத்ஸாகத்தைக் கொடுக்கவேண்டும். சில சமயங்களில் அப்படிக் கொடுக்கத் தவறினாலும், அது நாம்தேடாமல் தானாகவந்தபடியால், அதையும் உத்ஸாகத்தோடு நாம் செய்யவேண்டும். இப்படி நாம் செய்யும் வேலையிலெல்லாம் உத்ஸாகம் மேலிட்டு அப்படியே நிலைக்கப்பழகிவிட்டால் அதுவே போதும்—மனது எப்பொழுதும் ஒரே உத்ஸாகமாயிருந்து விட்டால் அதை விடவேறென்னவேண்டும்? ஒருவனுடைய கடமை இன்னதென்று பிறர் சொல்லமுடியாது. அவன் மனது சுத்தமாயிருந்தால் அது அவனுக்கே தெரியும். ஆனால் அவன் தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளாமலிருக்கவேண்டும்—பிறரை ஏமாற்றாமலிருந்துவிடலாம். அது பெரிதல்ல. அதோ நாடகக்காரர்கள் ஆட்டம் ஆரம்பிக்கிற வாத்தியம் கேட்கிறது—நான் போகிறேன்.

ஹேமசந்:—இப்பொழுது ஆடப்போகிற ஆட்டம் இன்னதென்றும் இன்னத்துக்காகவென்றும் தங்களிடத்தில் முன்னமேயே சொல்லியிருக்கிறேன். என் பிதாவின் கொலை நடந்ததுபோலவே இந்த ஆட்டத்திலும் ஒரு கொலை நடத்திக் காட்டப்படும். அப்

பொழுது என் சிற்றப்பனை நன்றாய்க் கவனித்துப் பாருங்கள்—அவன் முகத்திலாவது, பேச்சிலாவது, நடத்தையிலாவது யாதொரு விகாரம், தடுமாற்றம் ஒன்றுமில்லாவிட்டால் அந்த தேவதை துர்தேவதை என்றே நம்ப வேண்டும்—அதன் கதையெல்லாம் நம்மை ஏமாற்றி நரகத்திற்கிழுக்க ஏற்படுத்திய கட்டுக்கதையே—நானும் நன்றாய்க் கண்கொட்டாமல் கவனிக்கிறேன். ஆட்டம் முடிந்த பிறகுநம்முடைய அபிப்பிராயத்தைக் கலந்து கொள்வோம்.

ஹரிராஜ :—அவரிடத்தில் கொஞ்சமாவது ஜாடை ஏற்படும் பக்ஷத்தில் அது என் பார்வையைத் தவறிப்போகாது பார்த்துக்கொள்ளுகிறேன்.

ஹமேசந் :—அவர்களெல்லாம் அதோ நாடகம் பார்க்க வந்துவிட்டார்கள்—நானும் அவர்களெதிரில் வேலையாயிருக்கிறதாகக் காண்பித்துக் கொள்ளாமல் சும்மா திரிந்து கொண்டிருக்கவேண்டும்—தங்களுக்கு ஒரு இடம் பார்த்துக்கொள்ளுங்கள்.

ஹரிராஜ :—(தனக்குள்) இவர் சாதாரண மனிதனல்ல. ஆகாசத்திலிருந்து நழுவி விழுந்த நக்ஷத்திரமே ஒழிய வேறில்லை.

(வாத்திய கோஷத்துடன் ராஜு, ராணி, புலஸ்தியவர்மா, உத்பலாக்ஷி, கடோர்க்கஜசேனை, உக்கிரருத்திரப்பிரதாபன் எல்லோரும் வருகிறார்கள்).

ராஜு :—ஹேமசந்திரா, என்ன சமாசாரம்? சாவகாசமாயிருக்கிறாய், ஆட்டம் ஆரம்பிக்கவில்லையா?

ஹேமசந் :—எனக்கு சாவகாசத்துக்கென்ன குறைவு? தங்களுக்குத்தான் எப்பொழுதும் ராஜ்யபாரம் இருந்துகொண்டே இருக்கிறது—சாவகாசமட்டும் எனக்குக் கொடுத்துவிட்டால் சாப்பாடுகூட வேண்டியதில்லை. என்னைப்போல் செலவில்லாத ராஜகுமாரர்கள் தங்களுக்கு எங்கும் கிடைக்கமாட்டார்கள். ஒரு கோழிக்குஞ்சு வளர்த்தால்கூட இதைவிட அதிகம் செலவாகும்.

ராஜு :—இந்தப்பேச்செல்லாம் எனக்கென்னத்துக்கு? எனக்கு சம்பந்தமில்லை.

ஹேமசந் :—என் வாயைவிட்டுப் போன பிறகு எனக்கென்னத்துக்கு? எனக்கும் சம்பந்தமில்லை. (புலஸ்தியவர்மாவைப் பார்த்து) நீர் கல்விச்சாலையில் படித்தபொழுது நாடகமாடியிருக்கிறீரல்லவா?

புலஸ்தி :—ஆம், ஆடினதுண்டு; அப்பொழுதெல்லாம் என்னை நல்ல ஆட்டக்காரனென்றுதான் சொல்லிக்கொண்டார்கள்.

ஹேமசந் :—நீர் என்ன வேஷம் போட்டிருக்கிறீர்?

புலஸ்தி :—நான் பாரதக்கதைகளில் சகுனிவேஷத்தில்தான் கை தேர்ந்தவனென்று பெயர்.

ஹேமசந் :—அதற்கு வேஷமே வேண்டியதில்லையே—நீரே சகுனி அவதாரமாச்சுதே!—இன்னும் ஏன் தாமசம்? ஆட்டம் ஆரம்பிக்கச்சொல்.

உக்கிர :—தங்கள் உத்திரவுக்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறார்கள்.

ராணி :—அப்பா ஹேமசந்திரா, இங்கே என் சமீபத்தில் வந்து உட்கார்ந்துகொள்.

ஹேமசந் :—இல்லை அம்மா, இங்கே ஒரு காந்தம் என்னை இழுக்கிறது.

புலஸ்தி :—(ராஜுவின் காதில்) அதைப் பார்த்தீர்களா மகாராஜ்! அவர் சொன்னது காதில் விழுந்ததா?

ஹேமசந் :—பெண்மணியே, உன் காலின் கீழ் நான் படுக்கட்டுமா? (உத்பலாக்ஷியின் நாற்காலியின்கீழ் திண்டுபோட்டு சாய்ந்து கொள்ளுகிறான்.)

உத்பலா :—கூடாது சுவாமி!

ஹேமசந் :—இல்லை, என் தலையைமட்டும் அங்கே வைத்துக்கொள்ள உத்திரவு கேட்டேன—வேறு விகல்பமாக நினைக்க வேண்டாம்.

உத்பலா :—நான் ஒன்றுமே நினைக்கிறதில்லை சுவாமி!

ஹேமசந் :—அதுதான் கன்னிகைகளுக்கு லக்ஷணம்.

உத்பலா :—ஏது இன்றைக்குக் குதூஹலமாயிருக்கிறீர்கள்?

ஹேமசந் :—யார்? நானு? நான் வெறும் விகடகவிதானே! குதூஹலமாயிராமல் எனக்கென்னகேடு? அதோ எங்களம்மாவைப்

பார்.—என் தகப்பனர் இறந்து இரண்டு நாழிகையாகி விட்டது—இன்னும் அவள் எவ்வளவு குதூஹலமாயிருக்கிருள் பார்!

உத்பலா:—இரண்டு நாழிகையா? மூவிரண்டு ஆறுமாதமாகிவிடவில்லையா!

ஹேமசந்:—அவ்வளவு நேரமாகிவிட்டதா? அப்படியானல் நான்மட்டும் ஏன் விசனப்படவேண்டும்? அதற்காகத்தான் குதூஹலமாயிருக்கிறேன். என்ன அநியாயம்! செத்து ஆறுமாதமாகிவிட்டால் இன்னும் அவரை மறக்கக்கூடாதா? அப்படியானல் கொஞ்சம் பெரிய மனுஷியர்கள் செத்தால் கிட்டத்தட்ட ஒருவருஷம் வரையில் அவர்களுடைய ஞாபகம் உலகத்தில் நிலைக்கும்போலிருக்கிறதே! ஆனல் அதற்கவன்மட்டும் ஒன்று செய்யவேண்டும். சாலைமுழுவதும் தண்ணீர்த் தொட்டிகள் கட்டி அவைகளின்பேரில் தன்பெயரைக் கருங்கல்லில் வெட்டிவைக்கவேண்டும்—இல்லாவிட்டால் அவன் பெயர் பஞ்சபாண்டவர்கள் பெயரைப்போல் "தருமனும், பீமனும், மற்றொருத்தனும், மற்றொருத்தனும்" என்று சொல்லும்படி ஆகிவிடும்!

(உள் நாடகம் ஆரம்பிக்கிறது.)

[இரண்டு சிறுபிள்ளைகள் ராஜவேஷம் ராஜாத்திவேஷம் போட்டுக்கொண்டு கதையின் வரலாற்றைச் சுருக்கமாய் சைகைகளினல் மட்டும் காண்பிக்கிறார்கள்:—அதாவது ஒரு உத்தியானத்தில் இருவரும் சிரித்து விளையாடிக்கொண்டு ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து முத்தமிடுகிறார்கள். பிறகு ராஜாத்தி தலைகுனிந்து கைகும்பிட்டு நிற்கிருள். ராஜா அவள் கையைப் பற்றிக்கொண்டு தோள்மேல் சாய்கிருன்—பிறகு கீழே கட்டிருக்கும் பூஞ்செடிகளுக்கு மத்தியில் ராஜா படுத்துறங்குகிருன், ராஜாத்தி அவன் தூங்குவதை பார்த்துவிட்டு மெதுவாய் எழுந்து போய்விடுகிருள். உடனே ஒரு சிறுபயல் சற்றேனும் சந்தடி செய்யாமல் வந்து தூங்கும் ராஜாவின் கிரீடத்தை மெதுவாய் எடுத்து முத்தமிட்டு மடியில் வைத்துக்கொண்டு ஒரு சிறு சீசாவிலிருந்து விஷத்தை அவன்காதில் ஊற்றிவிட்டுப் போய்விடுகிருன்—ராஜாத்தி திரும்பிவந்து தன் கணவன் இறந்துகிடப்பதைக்கண்டு தலைமயிரைப் பிய்த்துக்கொண்டு வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொள்ளுகிருள். பிறகு விஷம்கொடுத்த பயல் இரண்டு அல்லது மூன்று சிறுவர்களோடு திரும்பி வந்து அவளோடுகூட துக்கிக்கிருன்—மற்றவர்கள் ராஜாவின் பிரேதத்தை எடுத்துக்கொண்டு போனபிறகு, விஷம் கொடுத்தவன் அவளுக்கு ஆபரணங்களும் வஸ்திரங்களும் கொடுத்து அவளிடத்தில் நயவசனங்கள் பேசி பிரியம் பாராட்டுகிருன். முதலில் அவள் கொஞ்சம் மனமில்லாதவள்போல் காட்டிக்கொண்டு அப்புறம் திரும்பிக்கொள்ளுகிருள். ஆயினும் கடைசியில் அவனேடு கை கோர்த்துக்கொண்டு போய்விடுகிருள்.]

உத்பலா:—இதென்ன சுவாமி?

ஹேமசந்:—இதுதான் "கீழ்வெட்டுத்தனம்" என்பது—அதாவது "கமட்டு விஷமம்."

உத்பலா:—இதுதான் கதையின் வரலாறு?

(சூத்திரதாரன் வருகிருன்.)

ஹேமசந்:—இதோ வருகிருனே இவனைக் கேட்டால் தெரியும். இந்த ஆட்டக்காரர்களுக்கு ஒன்றையும் ஒளிக்கத் தெரியாது. எல்லாம் வெளியிட்டு விடுவார்கள்.

உத்பலா:—இப்பொழுது காண்பித்த காக்ஷி என்னவென்று சொல்வானு?

ஹேமசந்:—இதுமட்டுமா? நீ இன்னும் ஏதாவது காக்ஷிகள் காண்பித்தாலும் அதற்கும் அர்த்தம் சொல்வான்.

உத்பலா:—நீங்கள் "இடவெட்டாய்" பதில் சொல்லுகிறீர்கள்—நான் தங்களோடு இனி பேசவில்லை.

சூத்திரதாரன்:—மலர்களைத் தூவிக்கொண்டு பாடுகிருன்.

(இராகம்—இந்துஸ்தானி ஆதிதாளம்.)

பல்லவி.

சேவடி பணிந்தேனே கலைமகளே—

சரணங்கள்.

நான்முகன் தேவியே நம்பினேனுன்னையே
யான்முயலும்தொழிலும்நடந்தேறவே (சே)

வித்யா ரூபமாய் விளங்கிடும் பாவையே
நித்யமுமிவ்விடத்தே நிலைத்திருப்பாய் (சே)

இச்சபையோருக்கு வந்தனம்! எங்கள் புல்ல றிவைக்கொண்டு நடத்தும் இந்நாடகத்திலு ள்ள குற்றமெனும் நீரை நீக்கிக் குணமெனும் பாலை யருந்தும்படிக்குப் பரமஹம்ஸர்களைப் பிரார்த்திக்கின்றனன்! (போய்விடுகிறான்).

ஹேமசந்:—இதென்ன, பாட்டோ பழ மொழியோ? என்னவோ சடசடவென்று மழைபெய்வதுபோல் சற்றுநேரம் பொழிந் துவிட்டுப் போய்விட்டானே!

உத்பலா:—பாட்டு வெகு சுருக்கமாயிருக் கிறதே!

ஹேமசந்:—ஸ்திரீயின் நேசத்தை விடவா?

(ராஜா வேஷக்காரனும் ராஜாத்தி வேஷக் காரனும் வருகிறார்கள்.)

ராஜா:—வாராய் பிரியசகி! இப்பவும் நான்முகன் நம்மிரு உடலையும் உயிரொன் றால் பிணைத்து முடிபோட்ட பின்னர் யுதற் கு சாக்ஷியாயிருந்த கதிரவன் கடல்சூழிவ் வுலகைச் சுற்றிப் பன்னிரு ஆண்டுகள் பரிவு டன் வளர விண்ணின் வழியே விரைவில் வந்து சேர்ந்தனன்.

ராஜாத்தி:—இன்னும் முன்னூறு பன் னிரு ஆண்டுகளானாலும் நம் பிரியம் தவறும லும் நமக்கொரு பிரிவு வாராமலுமிருக்கவே கடவுளை அடியேன் வேண்டுகின்றனன். ஆயினும் என் பிராணநாதருக்கு கொஞ்ச காலமாய் தேகசௌக்கியமில்லைப்போல் தோ ற்றுகிறதே!—தங்கள் முகத்தின வாட்டத் தையும் உடல் மெலிந்திருப்பதையும் நோக்க என்னுவி பதறுகிறதே! ஆனால் நான் துக்கிப் பதற்காகத் தாங்கள் வருந்தவேண்டாம்.

(பாடுகிறாள்)

(இராகம்—செஞ்சுருட்டி; ஏகதாளம்.)

பல்லவி.

பெண்ணெனப் பட்டவள் பேதை
எண்ணி மனமேங்குவளே கோதை.

சரணங்கள்,

தீங்குதுயர் வாராமல் நீங்கிடவே நாடுபவள்
தூங்குமொரு நாயகனைப் பாங்குடனேபாது
[காப்பள் (பெண்)

கொண்டவன்காலில் சிறு கல்லிடர்ப்பட்டால்
கண்டவள் கண்ணிலது கருக்கெனவுறுத்தும்
(பெண்)

ஆதலால் எனதன்பின் மேலிட்டால் நான் இப்படி பயப்படுகிறேனென்று தாங்கள் அறிவீர்கள். ஸ்திரீகளின் மனதில் அன்பும் பயமும் ஓரளவாய்க் குடியிருக்கும். முதலா வது அதிகரித்தால் இரண்டாவதும், அதே அளவுக் கதிகரிக்கும் - இதுகாறும் என்னு டன் பழகிய தாங்கள் என்னுடைய அன்பின் அளவை அறிவீர்கள்—ஆதலால் நான் தங் களைக்குறித்து அடையும் பயமும் அதே அ ளவினதாயிருக்குமென்று அடியேன் சொல் லவும் வேண்டுமோ? தங்களுக்கு ஏதாவது அற்ப அசௌக்கியம் நேர்ந்தாலும் அது எனக்கு மலைபோல் தோற்றும்.

ராஜா:—என் பிராணநாயகி! யான் சீக் கிரத்தில் இவ்வுலகையும் உன்னையும் விட்டு விண்ணுலகுக்கேகும்படி நேர்ந்திடுமென நி னைக்கின்றேன். ஏனெனில் இப்பொழுது சின்னாட்களாக எனதுடல் என் சுவாதீனத் திலில்லாமலும் அவயவங்கள் தத்தம் தொழி லைச்சரிவர நிறைவேற்றுமலும் நின்றுவிடுகின் றன - ஆயினும் எனக்குப்பின்னிவ்வுலகில் நீ சுகமாய் ஜீவித்திருக்கவேண்டியது.

ராஜாத்தி:—சிவ, சிவ! தங்களைப் பிரிந் தும் நான் உயிர் தரிப்பேனோ? தங்களுடன் உடன்கட்டை ஏறுதலைத்தவிர தங்களுக்குப் பின் எனக்கு வேறு வாழ்வுண்டோ? இந்தப் பஞ்சபூத சாக்ஷியாய்ச் சொல்லுகிற இவ்வார் த்தையை யான் நிறைவேற்றுவிடில் இவ்வான மிடிந்து என் தலையில் விழட்டும்! தங்களைக் கொன்றதோஷம் எனக்கு சம்பவிக்கட்டும்!

(பாடுகிறாள்)

(இராகம்—பியாகு; ஆதிதாளம்.)

பல்லவி.

உம்மைபபோலெனைக் குற்றபேர்கள் - இந்த
உலகந் தன்னிலுண்டோ!

அநுபல்லவி.

அன்னைதந்தை குருதேவ - என்னகிலபிரா
[ணனுக்குங்கோவே (உம்)

சரணங்கள்.

அண்ணன் தம்பிக்குண்டோகம்—அதை
அடையுமட்டுமே அவர் சிநேகம்—பின்பு
எண்ணுவரர்கள் பலதுரோகம்—நீரே
ஈவீர் நன்மைகளநேகம்— (உம்)

மக்கள் பிள்ளைகளுக் கன்னவஸ்திரம்-தரும்
மட்டுமே அவர்கள் மித்திரம்—பின்பு
நினைவர் செய்வர் பலசூத்திரம்—என்றும்
நீடித்து மதன்பே சமுத்திரம் (உம்)

கணவனிறந்தபிறகு உடன்கட்டையேறுத வள் அவன் உயிர்த்திருக்கும்போதே அவனைக் கொன்றுவிட்டு மறுவிவாகம் செய்து கொண்டாலும் கொள்ளுவாள்.

ஹேமசந்தி :—(தனக்குள்) இவ்வார்த்தை உன் காதில் நாராசம்போல் விழவில்லையா அம்மா ?

ராஜா:—யான் நினையாதும் அப்படிக்கட்டுப்படுத்துவானல்லன்-எனக்குப்பின்னர் நீ இவ்வுலகில் ஜீவித்திருப்பது எனக்கு முற்றிலும் சம்மதமே! ஆனால் நீ மறுவிவாகமட்டும் செய்துகொள்ளாதிருப்பின் அதுபோதும். இப்பொழுது நீ சொல்லுவதெல்லாம் முழுமனதோடு அந்தரங்கமாகவே சொல்லுகின்றனை என்று நம்புகின்றேன். ஆனால் நாம் நினைக்கிறபடி எல்லாம் நடந்தேறிவருகிறதா? அல்லது நாமேதான் நடந்துவருகிறோமா? நாமொன்றுநினைக்கத் தெய்வமொன்றுநினைக்கும் எனப்பழமொழியில்லையா?

ஷேமசங்:—(தனக்குள்) தெய்வத்தைப் போய்க்கேட்டால் "நானொன்றுநினைக்க மனிதன் வேறொன்றுநினைக்கிறானே" என்று முறையிடுகிறதாம்.

ராஜா:—ஒன்று நினைக்கினது ஒழிந்திட் டொன்று [கும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்-ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளுமீசன் செயல்.

நாம் நடத்துவதாகத் தீர்மானிக்கும் ஏற்பாடுகளை நாமே மறந்துவிடுகிறோம். அல்லது அப்படி நடத்த யத்தனிக்கையில்நேரும் இடையூறுகளையும் அசௌகரியங்களையும் எதிர்த்துப்போராடும் மனவலியில்லாமல் நம் உறுதிமொழிகளை எல்லாம் கைநழுவ விடுகிறோம்.

ஆனால் நமக்கு நாமேவற்படுத்திய சட்டத்தை நாமே மாற்றிக்கொள்வதுநியாயந்தான். ஓர்வித மனநிலைமையில் நாம் செய்ததீர்யானத்தை மற்றோர் மனநிலைமைவந்த உடனேமாற்ற நமக்கதிகாரமில்லையா? நமது மனநிலைமைகள் மாறுவதற்கோ அளவேயில்லை.

உண்பது நாழியுடுப்பது நான்குமுழம்
எண்பதுகோடி நினைந்தெண்ணுவன-கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின்கலம்போலச்
சாந்தனையுஞ் சஞ்சலமேதான்.

அதிர்ஷ்டம் மாறிடவேபுத்தியும்மாறிவிடும், அன்பும்மாறிடும், பிறருக்குநம்மிடத்திருந்த மதிப்பும்மாறும். இப்படி மாறிக்கொண்டே இருப்பதுதான் இவ்வுலகின் இயல்பு. உயர் நிலையிலிருப்பவன் தாழ்வடைந்தக்கால் அவனதுநேயர்களே அவனுக்கு முக்கிய வைரிகளாகிவிடுவார்.

கல்லானேயானாலும் கைப்பொருளுண்டாயின்
எல்லோருமங்கவனை எதிர்செல்வர்-இல்லானை
இல்லாளும்வேண்டாள் ஈன்றெடுத்த தாய்வேண்
செல்லாதவன் வாயிற்சொல். [டாள்.

ஆகலால்யான் சொல்வதியாதெனில் ஒரு தொழிலையும் தவறாமல்செய்து முடிப்போமென்று உறுதியாய் கூறக்கூடாது. ஏனெனில் அதற்கு நம்மாலும் விதியாலும் எவ்வளவோ இடையூறுகள் நேரக்கூடும்.

நமதெண்ணம் நமதேஒழிய அதை நிறைவேற்றும்செயல் நமதல்ல-

ஆராயும்வேளையிற் பிரமாதியானாலுமையவொ
[ருசெயலுமில்லை,
யமைதியொடு பேசாத பொறுமைபெறுகுண
[சாந்தராமெனவிருந்தபேரும்
நோரகவொருகோபமொருவேளைவரவந்தநிறை
[வொன்றுமில்லாமலே
நெட்டுயிர்த்தட்டழிந்துளறுவார், வசனநிர்வாக
[மென்ற பேரும்
பூராயமாயொன்று பேசுமிடமொன்றைப்புலம்
[புவார், சிவராத்திரிப்
போதுதுயிலோமென்ற விரதியரு மறிதுயிற்
[போலே யிருந்துதுயில்வார்,
பாராதிதனிலுள்ள செயலெலாமுடிவிலே பார்
[க்கினின் செயலல்லவோ,
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
[பரிபூரணானந்தமே.

ஆதலால் இப்பொழுது நீ கூறியதெல்லாம் மனப் பூர்வமாயிருந்தபோதிலும் எல்லாம் நடந்தபிறகுதான் நிச்சயமென்று நம்பவேண்டும்.

ராஜாத்தி:—நான் தங்களுக்குப்பின்னுயிர் வாழும் பக்ஷத்தில் பிரம்மஹத்தி கோஹத்திய தோஷங்கள் இரண்டும் என்னைச் சேரக்கடவது! உண்ணச்சோறும் உடுக்கத்,

துணியுமில்லாமல் இரக்கக்கடவேன். நேசமாயிருக்கும் தம்பதிகளுக்குள் பித்திரபேதம் செய்வித்த பாபம் என்னைப் பிடிக்கக்கடவது! கர்ப்பத்திலுள்ள சிசுவைக்கலைத்த தோஷம் எனக்கு சம்பவிக்கட்டும்–உண்பவர் சோற்றில் மண்ணைக்கலந்தவர்க்குள்ள தண்டனையை அடைகிறேன்! கண்ணெதிரிலில்லாதவர்களைப்பற்றி அபவாதம் சொன்ன பாபத்திற்காளாகிறேன். எவ்வளவுதான் ஏராளமான செல்வமும் செல்வாக்குமிருந்தாலும் தங்களை விட்டு எனக்கு வேறு வாழ்வுண்டா? (பாடுகிறாள்.)

இராகம்–அசாவேரி–திரிபுடைதாளம்.

பல்லவி

எத்தனை ஆனாலும் பர்த்தாவைப்போலெனக்
கிசைந்தவர் ஆரடி!

சரணங்கள்

காணிக்கையாகநான் புத்தியறியுமட்டும்
காத்திருந்தென்னைத் தொட்டாரே [லக்
கால்முதல்தலைமட்டும்பொன்காய்த்தமரம்போ
கனத்தநகைகளெல்லாமிட்டாரே (எத்தனை)
தங்கக்கிண்ணியில்சோறும் வெள்ளிக்கிண்ணி
சட்டம்சட்டமாக உண்டேனே [யில்பாலும்
தாதியர்கால்பிடிக்கவே மாளிகையில்நல்ல
சப்பிரமஞ்சத்துயில் கொண்டேனே
ஆணிப்பொன்னே அறியேன்நான் ஒருகஷ்டம்
அத்தானலல்லவோ எனக்கித்தனை அதிர்ஷ்டம்
(எத்தனை)

ஹேமசந்:—இவ்வளவு பிதற்றலும் சற்றுப் பொறுத்தால் தெரியும்.

ராஜா:—நல்லது சகி! உனது உறுதியை முற்றிலும் யான் நம்புகின்றேன். எனக்கு சோர்பலும் மயக்கமுமாயிருக்கின்றமையால் இப்பூஞ் செடிகளின்கீழ் சற்றுப் படுத்துக்கண்ணயருகிறேன். (என்று படுக்கிறான்)

ராஜாத்தி:—என்னரசே, நீநன்றாய்க்கண்துயில்வாயாக! நம்மிருவருக்கும் யாதொருபிரிவும் வராதிருக்கக்கடவது (என்றுபோய்விடுகிறார்கள்.)

(இன்னும் வரும்.)

---

# THE HOLY BENARES.

# ஸ்ரீ காசி.

---

(139-வது பக்கத்தொடர்ச்சி.)

## நகரமண்டபம்.

இது ஒரு பெரிய கட்டடம். சூனர் கற்களால் 1870-ம் ௵ இந்த நகரத்திற்கு வந்திருந்த சக்கரவர்த்தியாருடைய தம்பியாகிய (Duke of Edinburgh) டியூக் ஆப் எடின்பர்க் என்பவரின் ஞாபகமாக கட்டத்தொடங்கி, நமது சக்கரவர்த்தியின் மூத்த குமாரராகிய ஆல்பர்ட் ராஜகுமாரர் இவ்விடத்திற்கு வந்த சமயத்தில் இந்த கட்டடம் முடிந்தபடியால் அவருடைய நாமம் சூட்டப்பட்டு ஆல்பர்ட் ஆல் என்ற பெயரே வழங்குகிறது. இதில் ஆனரெரி மாஜிஸ்டிரேட் கச்சேரி நடந்துவருகிறது. இது பொதுஜன சம்மதமானதன்று.

## பிரின்ஸ் ஆப் வேல்ஸ் ஆஸ்பத்திரி.

1876-ம் வருஷத்தில் நமது சக்கரவர்த்தி பிரின்ஸ் ஆப் வேல்ஸ் என்ற பட்டப்பெயருடன் இவ்விடம் வந்திருந்த காலத்தில் அவர்கையால் அஸ்திவாரக்கல் நாட்டப்பட்டு, கவர்னர் ஜனாலாயிருந்த ராஜதந்திர வல்லபராகிய வார்டுரிப்பன் பிரபுவால் திறக்கப்பட்டது. கட்டடம் மிகவும் அழகாகவிருக்கின்றது.

## கார்மிகேல்-லைபிரேரி.

இது 'சவுக்கு' என்னும் கடைத்தெருவிலிருக்கிறது. இதில் சுமார் பத்தாயிரம் நூல்களிருப்பதுடன், பெங்காலி, மாராட்டி, இந்துஸ்தானி, இங்கிலீஷ்பத்திரிகைகள் ஏராளமாய் வரவழைக்கப்படுகின்றன. சென்னையில் பிரசுரமாகும் இந்துபத்திரிகை ஒன்றைத்தவிர மற்றவைகள் வடதேசத்தியவைகள். யாவரும் தாராளமாய் சென்று புஸ்தகமோ பத்திரிகையோ படிக்கலாம். 1874-ம் ௵ காசிராஜா, விஜயநகரம்ராஜா, வேறு சில பிரபுக்களின் பண உதவியால் கட்டப்பட்டு, அக்காலத்தில் இப்பாகத்தின் கம்மிஷனராகவிருந்த கார்மிக்கேல் என்பவரின் பெயரிடப்பட்டதாகத் தெரியவருகிறது.

## மன்மந்திர நக்ஷத்திர சாலை.

தசாஸ்வமேத கட்டத்திலிருந்து பெரிய பாதை வழியாகச் சென்று ஒரு சந்தில் திரும்பினால் இந்த கட்டடத்திற்கு செல்லலாம்.

இரண்டாவதி மெத்தையின்மேல்தான் வட்டமும், நெடுக்கலும், குறுக்கலுமான சில விசித்திரமான கட்டடங்களிருக்கின்றன. இவைகளின்பேரில் கடியாரலக்கம்போன்றவரைகளும், எண்களும் காணப்படுகின்றன. இவைகளை மகமதுஷா என்ற அரசர் 180 வருஷங்களுக்கு முந்திக் கட்டி வைத்ததாக சொல்லப்படுகிறது. இந்தமாதிரி எந்திரங்கள் டில்லி நகரத்திற்கு மூன்றுமைல் அப்பாலுள்ள ஓர் பாழடைந்த விடத்திலிருக்கிறது. காசியிலுள்ள இந்த யந்திரங்களை கவரன்மெண்டார் பாதுகார்ப்பதுபோல டில்லியிலிருப்பதை பாதுகார்ப்பதில்லை போல் தோற்றுகிறது.

## அவுரங்கசீப் கோரிகள்.

பஞ்சகங்கா கட்டத்தில் ஒன்றும் விஸ்வேஸ்வார் ஆலயத்தையடுத்து ஒன்றுமுள்ளது. பூர்வீக விஸ்வேஸ்வார் ஆலயத்தையிடித்து அதிலிருந்தவிடத்தில் ஒன்றையும், பிந்துமாதவர் கோவிலையிடித்து அதிருந்தவிடத்தில் ஒன்றையும் கட்டினதாகத் தெரியவருகிறது. விஸ்வேஸ்வார் ஆலயத்திற்கடுத்த கோரியில் இந்துக்களுடைய பூர்வீக கட்டடம் இன்னும் தோற்றப்படுகிறது. பிந்துமாதவர் சந்நிதிக்கடுத்ததே பெரியது. இந்த கோரியின்பேரில் கட்டியிருக்கப்பட்ட ஸ்தூபிகள் சுமார் 100 அடி உயரமிருக்கலாம். இதன்பேரில் ஏறிப்பார்த்தால் நகரத்தின் காக்ஷியை செவ்வையாய்க் காணலாம். ஆள் ஒன்றுக்கு காலணு வாங்கிக்கொண்டு விடுகிறார்கள். விஸ்வேஸ்வார் ஆலயத்திற்கு சமீபத்திலிருப்பது மிகவும் ஈனஸ்திதியிலிருக்கிறது.

## இராம மந்திரம்.

மேற்சொன்ன கோரிகளைப் பார்த்துக்கொண்டு மேலே சென்றால் சற்றுதூரத்தில் இராமமந்திரம் என்ற குவாலியர் சமஸ்தானத்து முக்கிய மந்திரியாகவிருந்த இராஜா டின்கர்ராவ் ரகுநாத் அவர்கள் கட்டியிருக்கிற திவ்வியமான மஹாலேயும் அதிலுள்ள கற்றூண்வைத்து வெகு அலங்காரமாய் செய்திருக்கிற பெரிய அறையையும், அதிலுள்ள ஸ்ரீராம சுவாமியையும் தரிசிக்கலாம். இந்த அறையின் மத்தியில் ஒரு பண்டிதர் இராமாயணம் படித்து இந்துஸ்தானியில் வியாக்கியானஞ்செய்வதை பலர் கேட்டு ஆநந்திக்கிறார்கள்.

## சிந்தியாராஜா சத்திரம்

இது கோடிக்கணக்காக செலவுசெய்து மூன்றடுக்குவைத்து கட்டிய பிர்மாண்டமான கட்டடம். இதில் ஒரு பெரிய அறையும் அதில் வெங்கடரமணஸ்வாமியும் பிரதிஷ்டை செய்யப்பட்டு தினப்படி பூஜை நடந்துவருகிறது.

## நாகப்பூர்ராஜா மந்திரம்.

இது கோசலகாட்டுக்கு மேல்பாகத்திலிருக்கிறது. இதிலும் ஒரு பெரிய அறையும் லக்ஷ்மிநாராயணமூர்த்தியுமிருக்கிறது. இந்த சந்நதிக்கு திரயான வேலைப்பாடுள்ள ஒரு கோபுரமும் கட்டியிருக்கிறார்கள்.

## கங்காமஹால்.

இதில் ஒரு திவ்வியமான பெரிய அறையும், கிருஷ்ணமூர்த்தி சந்நதியும், அதன் முன்புறத்தில் இராமாயண படனமும் தினப்படி நடந்துவருகிறது.

## சங்கடமாதா கோவில்.

மேற்சொன்னதற்கு சமீபத்தில் கவுரிசங்கர் என்ற புண்ணியாத்மாவால் கட்டப்பட்ட சங்கடமாதா என்ற திவ்வியமான ஆலயம் பார்க்கத்தக்கது. இந்த சந்நதிக்குப்போகிற வழியில் கணபதிஸ்வாமிகள் என்ற சித்தபுருஷர் இருந்தவிடமும், அவர் பூஜித்த பிர்மாண்டமான சிவலிங்கமும் கணபதிஸ்வாமிகளுடைய சிலாரூபமும் காணப்படுகிறது. இதற்கடுத்த முனிஷிகாட்டிற்கு மேற்புறத்தில் பலவநாதராவ் கட்டியிருக்கிற ஆலயமும் மணிகர்ணிகாதேவி கோவிலும், ஒரு சிவாலயமும் பார்க்கத்தக்கவைகள்.

## ஆதிபுரேஸ்வரர்.

இது ஒரு சிறிய ஆலயமாகவிருந்தபோதிலும் இதிலுள்ள லிங்கம் அதிக பூர்வீகமானதென்றும், இதுவொன்றை தரிசிப்பதால் காசியிலுள்ள தேவர்களை எல்லாம் தரிசித்தபலன் கிடைக்கிறதென்றும் கூறப்படுகிறது.

இப்படியே இந்நகரத்தில் கணக்கற்ற மந்திரங்களும் ஆலயங்களுமிருப்பதாலும் நாம் ஆதிபுரேஸ்வாரை தரிசித்துவிட்டபடியாலும் திருப்தியடைந்து காசி இராஜருடைய அரண்மனைக்குச் செல்வோம்.

## இராமநகர்.

இது கங்கையின் அக்கரையிலுள்ள ஊர். இதில் கங்கைநதிக்கரையோரத்திலுள்ளது காசிராஜாவினுடைய கோட்டை. காசியிலுள்ள நதி கட்டத்திலிருந்து இந்த கோட்டைக்குச் செல்லவேண்டுமானல் போட்டின்பேரில் ஏறிக்கொண்டு நதியை எதிர்த்துச் செல்லவேண்டும். கடைசி கட்டமாகிய அசிகட்டத்திலிருந்து குறைந்தது மூன்றுமைலிருக்கும். நதியில் நீர்மட்டத்திற்குமேல் சுமார் 40 அடி உயரம் பலமான அஸ்திவாரம்போட்டு அதற்குமேல் கட்டடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. முன்புறத்தில் கங்காதேவி ஆலயமிருக்கிறது. இந்த வழியாகச் சென்றால் சில கங்காபுத்திரர்கள் போனசபிடித்தவர்களாய் பைசா கொடுத்ததெல்லாம் போதாதென்று ஜனங்களை இம்சை செய்கிறார்கள்.

தெருவழியாகச்சென்று கோட்டைக்குள் பிரவேசிப்பது நலம். இதற்குள் இராஜாவினுடைய அரண்மனை, கஜானா, இதா ஆபீசுகள், விநோதப்பொருள் சாலை, முதலிய பல கட்டடங்களைப் பார்க்கலாம்.

இந்த ஊரில் ஒரே தெருவு முக்கியமானது. இதற்கு ஒரு பெரிய தலைவாசலுமுண்டு. இதற்கு சமீபத்தில் தூர்க்காகுண்டம் என்ற குளமும் ஒரு கோவிலுமிருக்கிறது. இதில் ஆடு மாடுகள் பலியிடப்படுவது அதிகம். இதற்கு சமீபத்தில் பெலாபுரம் என்ற ஊர் தோற்றுகிறது. இதில் விஜயநகரம் இராஜருடைய அரண்மனையிருக்கிறது. இது ஒரு அழகிய கட்டடம்.

## சென்டிரல் இந்துகாலேஜ்.

இதற்கு அனுமான் காட்டிலிருந்து தண்ணீர் குழாய்களுக்கு தண்ணீர் இறைக்கும் கட்டடத்தின் வழியாகச் சென்றால் சமீபத்தில் காணலாம். இதற்கு காசி மகாராஜா சர் பிரபு நாராயணசிங்கு பகதூர் ஜி. சி. ஐ. இ. சுமார் எட்டு ஏகரா விஸ்தீரணமுள்ள இடமும் அதிலுள்ள ஒரு பெரிய மஹாலையும் கொடுத்திருக்கிறார். இதிலுள்ள ஒரு பெரிய பிரசங்கமேடையில் சுமார் இரண்டாயிரம்பேர் உட்காரலாம். இதையடுத்த ஐஸ்கூல் கட்டடமும், காலேஜ் கட்டடமும், போஜனவிடுதியும் கட்டப்பட்டு கம்பீரமாய்க் காணப்படுகிறது. தவிர இதற்கு சமீபத்தில் பிர்மக்யானசபைமந்திரமும், அன்னிபெசண்டு அம்மையின் வீடும், புஸ்தகசாலையும் காணப்படுகிறது. பிள்ளைகள் தேக அப்பியாசம்செய்ய விஸ்தாரமான காலியிடமிருப்பதுடன் பலவிடங்களில் சிங்காரமாக புஷ்பச்செடிகள் வைத்து பயிர் செய்திருக்கிறார்கள்.

## பொது விஷயம்.

இந்த நகரமானது இப்பூலோகத்திலுள்ள புராதனமும்பலவிதத்திலும்சிரேஷ்டமுமானவைகளில் தலைமைபெற்றதாதலால் இந்துக்கள் இதை கைலாயமென்று நம்பி இந்த ஸ்தலத்தை தர்சிப்பதே தங்களுக்கு முக்தியளிக்கும் சாதகமென்று தினப்படி பல பக்கங்களிலிருந்தும் கூட்டங் கூட்டமாக வந்துக்கொண்டேயிருக்கிறார்கள். தவிர வேறு மதஸ்தர்களும் இந்நகரத்தின் காக்ஷியை பார்த்து ஆநந்திப்பதற்காவே அடிக்கடி வந்துக்கொண்டேயிருக்கிறார்கள் வடதேசத்திலுள்ள பல இராஜாக்களும், சில பிரபுக்களும் தாங்கள் வரும் சமயங்களில் தங்கி வசிப்பதற்காக அந்தஸ்துக்கு தக்கினவிதமாக வாசஸ்தலங்களை மூன்று, நான்கு அடுக்குமெத்தைகள் வைத்து கட்டியிருக்கிறார்கள்.

சுமார் 20 சத்திரங்களில் அன்னம் தீராளமாய் போடப்படுகிறபடியால் வயிற்றுவளர்ப்பின் பொருட்டு பலர் வந்திருக்கிறார்கள். பல பக்திமான்கள் இவ்விடத்திலேயே மரணமடைய எண்ணமுள்ளவர்களாய் தங்கியிருக்கிறார்கள். ஆகவே அதிக ஜனநெருக்கமுள்ள பட்டணமாய் வளர்ந்துவிட்டபடியால் வியாபாரம் பலத்திருக்கிறது. பித்தளை பாத்திரங்கள், பட்டுத்துணிகள், ருத்திராக்ஷம், முதலியவைகளே முக்கியமானவைகள். (பலகரை) சோகி நாணயமாக வழங்கிவருகிறது. பித்தளைபாத்திரங்களும், விக்கிரகங்களும் விற்கப்படுகிற கடைகள் மட்டும் சுமார் ஆயிரத்திற்குக் குறையாது. பலவித தானியங்கள் விளைவிக்கப்படுவதுடன், கோதுமை, துவரை, காஞ்சை இவைகள் அதிகமாய் விளைவிக்கப்படுகிறபடியால் கோதுமையல்லது கஞ்சைமாவும் துவரைப்பருப்புமே ஜனங்களுடைய முக்கிய ஆகாரம். உருளைக்கிழங்கு. சேப்பங்கிழங்கு, நூல்கோல், டானிப்ஸ், மொட்டகோஸ், கத்தரி, வாழை, பலா, கொய்யா முதலிய காய்களும் பழங்களும் ஏராளமாய் கிடைக்கிறது. அவரைக்காய் மிகவும் சகாயமாய் விற்கப்படுகிறது. எல்லாம் நிறுத்தேகொடுக்கப்படுகின்றன. இவ்விடத்தில் சேருக்கு 80 தோலா. நெய், பால், தயிர்முதலானவைகளும் நிறுக்கப்படுகின்றன. பாலை இருப்புப் பாத்திரத்தில் சுண்டக்காய்ச்சி சொற்ப தயிரைவிட்டு வைத்துவிடுகிறார்கள். இது மறுநாள் ஒரே கட்டியாயிருக்கிறது. இதை கத்திபோன்ற மெல்லிய காண்டியால் அறுத்து, நிறுத்துக்கொடுக்கிறார்கள்.

ஜனநெருக்கத்தின் மிகுதியால் ஒவ்வொரு மெத்தைவீட்டிலும் மேல்மெத்தையில் பெரிய கிணறுபோன்ற பாய்கானக்களைக் கட்டியிருக்கிறார்கள். இவைகளில் சேரும் மலஜலங்களை வெளிபடுத்த சரியான வழிப்போக்குகளை ஏற்படுத்தாமலேயிருக்கிறபடியால் நாற்றம் அதிகரித்து பல வியாதிகளுக்கு காரணமாயிருக்கிறது. தவிர பல கட்டடங்களின் வழியாக ஊர் சாக்கடைஜலம் மகா சிரேஷ்டமென்று எண்ணப்படுகிற கங்காநதியில் கலக்கிறது பலர் இறந்துபோன நாய், குதிரை, பசுபோன்ற ஜெந்துக்களின் உடலை கங்கையில் போட்டுவிடுகிறார்கள். மணிகர்ணிகை கட்டத்திலும், அரிசந்திர கட்டத்திலும் தினப்படி நூற்றுக்கணக்காய் தகனஞ்செய்யப்படுகிற பிரேதங்களை செவ்வையாக தகனஞ்செய்யாமலே காட்டுவாளிகளில் கங்கையில் தள்ளிவிடுகிறார்கள். ஒவ்வொரு வீட்டிற்கும் குழாய் ஜலம் வருகிறதாயிருந்தாலும் பகலில் 12 மணிக்குமேல் 3 மணிவரையில் குழாய்களில் ஜலம் விடப்படுகிறதில்லை. பல ரோட்டுகளிலும் சந்துகளிலுமுள்ள சாக்கடைகள் செவ்வையாக அடிக்கடி சுத்தம் செய்யப்படுகிறதில்லை.

தவிர ராண்டி, சாண்டி, படில் என்ற மூன்று கஷ்டங்கள் இவ்விடத்திலுண்டு. இது இந்துக்களுடைய புண்யஸ்தலங்களில் தலைமைபெற்றதாதலால் இப்பாதக் கண்டத்திலுள்ள பல பக்கங்களிலிருந்து வாலிபப்பருவமுள்ள பலஜாதி விதந்துஸ்திரீகள் பெற்றோர்களிடம் சொல்லிக்கொள்ளாமலும், மாமியார், நாத்திகளிடத்தில் சண்டை செய்துக்கொண்டும் இவ்விடத்திற்கு வந்துசேர்ந்து கொஞ்சகாலமவரை கங்காஸ்நானமும விஸ்வநாதர் தரிசனமும் செய்து, பிறகு கெட்ட நடவடிக்கைகளில் பிரவேசித்து, கங்காபுத்திரர்கள் கைவசப்பட்டு, அவர்களுடைய மனைவிமார்களுக்கு வேலைக்காரிகளாய்

விடுகிறார்கள். அன்றன்று செய்கிற பாவமானது அன்றன்று செய்கிற கங்கஸ்நானத்தினால் நிவாரணமாகிவிடுகிறதென்ற நம்பிக்கையினால் இந்த ஸ்தலத்தில் விபசாரத்தை யொருதோஷமாக பெரும்பாலர் கருதுகிறதில்லை. இந்த புண்யபூமியில் செய்யப்படுகிற ஒவ்வொரு நற்காரியமும் ஆயிரமாக வளர்ந்து விசேஷ புண்ணியத்தைக் கொடுக்குமென்பதை மட்டும் கருதுகிறார்களேயன்றி, செய்யப்பட்ட கெட்ட காரியங்களும் ஒன்றுக்கு ஆயிரமாக வளர்ந்து பாபத்திற்கு ஆளாக்கி மீளாநரகத்தில் தள்ளுமென்பதை மறந்துவிடுகிறார்கள். இதனாலன்றோ நமது ஆதிசங்கரர்கூட காசிவாசமானது ஊசிவாசம் போன்றதென்று கூறினார் ஆகவேவிதவைகள்அதிகமென்று ஏற்படுகிறதுடன், அவர்களிலும் பலர் அநேகமாய் கற்பைக் கருதுகிறவர்களல்லவென்பதும் விதிதமாகிறது. சற்குணமுள்ள பலர் கங்காஸ்நானத்தையும், விஸ்வேஸ்வர தரிசனத்தையுமே தங்களுடைய விரதமாகக்கொண்டு மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சிலர் பிர்ம்மஞானிகளாகிய சந்நியாசிகளுக்கு பணிவிடை செய்துக்கொண்டு காலங்கழிக்கிறார்கள். கெட்ட வழிகளில் பிரவேசிக்கிற விதவைகளுக்குத்தகுந்த சில கபட சந்நியாசிகளும் வாலிபர்களும் ஏற்படுகிறார்கள். சாண்டி—என்பது விருஷபங்கள். இவைகள் பல பிரபுக்களால் விஸ்வேஸ்வரருக்கு வாங்கி விடப்பட்டவைகள். ஒவ்வொரு சந்திலும் தெருவிலும் இவைகள் யானைகளைப்போல் நின்றுக்கொண்டு நடப்பவர்கள் கையில் கொண்டுபோகும் பண்டு பலாதிகளையும் இலை, தழைமுதலியவைகளையும் பிடுங்கித் தின்றுவிடுகின்றன. பலர் இவைகளுக்கு கடலைச்செடி, புல்முதலியவைகளை வேண்டியளவு வாங்கிக் கொடுக்கிறார்கள். இப்பொழுது வரவர இவைகள் குறைந்துக்கொண்டு வருகின்றன. படில்—என்பது கங்கைப்படிகளே. குழாய் ஜலம் ஏற்படுவதற்கு முந்தி ஜலம் வேண்டியவர்கள் நூற்றுக்கணக்கான படிகளை இறங்கியேறியே ஜலம் கொண்டுபோக வேண்டியிருந்தபடியால் படிகளையும் கஷ்டமென்றே எண்ணினார்கள். இப்பொழுது எங்கே பார்த்தாலும் குழாய் ஜலம் வருகிறபடியால் இந்த கஷ்டமும் குறைந்துவிட்டதென்றுகூறலாம்.

இந்த ஸ்தலத்திற்கு வருகிற சந்நியாசிகளும், பைராகிகளும், யதிகளும், இந்த ஸ்தலத்திலேயே மரணமடைய வேண்டுமென்ற எண்ணத்தினால், ஒவ்வொரு கட்டத்திலுமுள்ள வசதியான மண்டபங்களில் தங்கி, தங்கள் தங்களுக்குப் பிரியமான புஸ்தகங்களை பாராயணஞ்செய்துக் கொண்டிருக்கிறார்கள். பலர் தத்வ விசாரஞ் செய்துக்கொண்டிருக்கிறார்கள். தர்க்கம், வியாகரணம் முதலிய சாஸ்திரங்களில் தேர்ந்த வித்வ சிரோன்மணிகள் பலரிருக்கின்றார்கள். ஒவ்வொருவருக்கும் தகுந்த மரியாதையான ஜீவனங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சிலர் இராஜாக்களால் அங்கங்கே ஏற்படுத்தப்பட்டிருக்கிற வேதபாடசாலைகளிலும், சிலர் இராமாயணபடனம் செய்வதிலும், காசிமான்மியம் வாசிப்பதிலும், சிலர் தத்வார்த்த ரகசியங்களை யதிகளுக்கு போதிப்பதிலும் தொழிலையியற்றி சுகமாகக் காலங் கழிக்கிறார்கள்.

அன்னபூரணி சத்திரம், பாலாஜிசத்திரம், நாட்டுக்கோட்டையார் சத்திரம், திருவாங்கூர் மகாராஜா சத்திரம், போன்ற பல தர்ம சத்திரங்களில் பிராமணர்களுக்கு திவ்வியமான சாப்பாடும்போட்டு அரையணா தக்ஷிணையும் தாம்பூலமும் கொடுப்பதன்றி, மற்ற ஜாதியார்களுக்கும் வேண்டியவரையில் அன்னதானஞ் செய்திருக்கிறார்கள். தவிர, பல தர்மவான்கள் சதாவர்த்தியென்பதாக யாவருக்கும் அரிசி, கோதுமைமாவு, பருப்பு முதலியவைகளை வேண்டியவரையில் கொடுக்கிறார்கள். ஆகையால் நகரத்தில் போஜனத்திற்கு தரித்ரமென்பதே கிடையாது. சிவாலய கட்டடத்திலுள்ள பிர்மாண்டமான கட்டங்களில் ஆயிரக்கணக்கான கோஷாயிகளும், அநுமான் கட்டடத்தில் நூற்றுக்கணக்கான சந்நியாசிகளுமிருக்கிறார்கள். இவர்களில் பலர் நிர்வாண சந்நியாசிகள். இவர்கள் மரணமடைந்துவிட்டால், மற்றவர்கள் தேகத்தை தகனஞ்செய்வதுபோலச் செய்யாமல், உரிகட்டி உட்காரவைத்த பாவனையாக கங்கைக்கரைக்குக்கொண்டுபோய் மண்டையில் சில தேங்காய்களை உடைத்தபிறகு, கலேபரத்தை படகு மார்க்கமாய் நடுகங்கைக்குக் கொண்டுபோய், மேலுங் கீழுமாக இரண்டு கற்களைவைத்து நன்றாகக்கட்டி எடுத்து கங்கா ஜலத்தில் போட்டுவிடுகிறார்கள். தவிர முன் சொல்லியபடி தகனஞ்செய்கிற பல பிரேதங்களையும் நன்றாக தகனமாவதற்கு முந்தியே கங்கையில் தள்ளிவிடுகிறார்கள். இறந்துபோன பல ஜீவஜெந்துக்களினுடைய உடல்களையும் கங்கையில் போட்டுவிடுகிறார்கள். அன்றியும் இந்த க்ஷேத்திரத்தில் மரணமடைய வேண்டுமென்ற எண்ணமுள்ள பலர் கங்கையில் இறங்கி விடுவதாகவும் தெரியவருகிறது. இவ்வளவோடு போகவில்லை. நகரத்தின் பலவிதக் கழிவு தண்ணீரெல்லாம் இந்த கங்கையில்தானே விடப்படுகின்றன. அப்படியிருந்தும் இந்த கங்கா ஜலமானது யாதொரு வாசனை, ருசி, நிறமில்லாததான பரிசுத்த ஜலமாகவே யிருப்பது அதனுடைய மேன்மையையும் சக்தியையும் காட்டுகின்றது.

பெலாபுரமென்றவிடத்தில் கிறிஸ்தவர்களுடைய சில கோவில்களும் பாடசாலைகளும் ஜய நாராயணர்காலேஜுமிருக்கின்றன. சாரநாத் என்றவிடத்தில் சர்க்கார் ஆபீஸ் கட்டடங்களும் சாங்கிண்டி, டாமாஸ்க் என்ற புவுத்தமதஸ்தர்களுடைய கட்டடங்களும் விநோத சித்திராலங்காரமுடையவைகள். இவ்விடத்தில் சுமார் 18-அடி உயரமுள்ள பவுத்தருடைய விக்கிரகத்தைக் காணலாம். தவிர பவுத்தர்களுடைய பல குகைகளும் காணப்படுகின்றன, இதற்கு சமீபத்தில் ஜயினமதஸ்தர்களுடைய கோவிலும் காணப்படுகிறது.

வியாசவாசி என்பது இந்நகருக்கு கிழக்கு திசையிலிருக்கிறது. கங்கா நதியைக்கடந்து நான்கு மைல் தூரம் நடந்து போகவேண்டும். இவ்விடத்தில் வியாசருடைய கோவிலும் மடமுமிருக்கிறது. இதையும் யாத்திரைக்காரர்கள் தரிசிக்கவேண்டியதே.

ஹே! காசிக்ஷேத்திரமே! உனது பெருமையை எழுதவல்லார் யார்? பல புஸ்தகங்களில் படித்தும், உன்னை தரிசித்தவர்கள் வாய்ப்படக்கேட்டும் திருப்தியடையாமல் பலநாள் பிரயத்தனஞ்செய்து புறப்பட்டுவந்து நேரில்கண்டு பெருமை பொருந்திய கங்கையில் பலதடவை ஸ்நானஞ்செய்து, உன்னிடம் வழங்கும் ஜோதிலிங்கமாகிய விஸ்வேஸ்வரரை பரிசித்து, தரிசித்து, அடிவணங்கி ஆநந்தமடைந்தோம். உன்னை தரிசித்தவர்களுடைய பாவங்களை நீக்கி முக்திக்கு வழியுண்டாக்குவது பெரியோர்களுடைய வாக்குபடி சத்தியமாதலால், உன் மகிமையை சற்றுமறிய சக்தியில்லாத ஒருவரால் எழுதப்பட்டதென்று அலக்ஷியஞ் செய்யாமல் படித்தவர்களையும், படிக்கக் கேட்டவர்களையும், மகா பாவங்களிலிருந்து நீக்கி பரிசுத்தவான்களாக்கும்படி அநேக நமஸ்காரங்கள் செய்து பிரார்த்திக்கின்றேன்.

ஓம் தத் ஸத்:

டி. ஸி. வெங்கடரமணஐயர்.

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

### 13. அதிகாரம்.

காமேசுவரய்யர் தங்கத்துக்கு சாந்தி முகூர்த்தம் செய்யவேண்டுமென்று நாராயணசாஸ்திரிகளுடன் அவர் பூணூலுக்கு வந்திருந்தபோது சொன்னார். நாராயணசாஸ்திரிகள் ஸ்ரீனிவாசன் எப். ஏ. பரிக்ஷை தேறாமல் சாந்தி முகூர்த்தம் செய்கிறதில்லை யென்றார். காமேசுவரய்யர் எப். ஏ. பரிக்ஷை தேறவில்லை யென்று வைத்துக்கொள்ளும். சாந்தி முகூர்த்தம் இல்லையா என்றார். நாராயண சாஸ்திரிகள்: ஓய் அவசகுணம்போல் அப்படிச் சொல்லாதேயும். தேறவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொள்ளும். எல்லாம் தேறும் என்றார். காமேசுவரய்யர் அய்யா தேறட்டுமே. தேறினால் எங்களுக்கெல்லாம் சந்தோஷந்தானே என்றார். பிறகு நாராயணசாஸ்திரிகள்: ஊருக்குப்போன ஆறுமாசத்துக்கெல்லாம் ஸ்ரீனிவாஸனுக்கு பரிக்ஷை தேறினதாக பட்டணத்திலிருந்து தந்திவந்தது. நாராயணசாஸ்திரிகள் ஸ்ரீனிவாஸனுக்கு ஓர் டிப்டி கலெக்டர் வேலை வந்ததுபோல் வெகு சந்தோஷப்பட்டார். அந்த தந்தியை பூஜையில்வைத்து அர்ச்சனை செய்தார். வெள்ளைக்காரன் பறைப்பயல் தொட்டது பூஜார்க்கமல்லவென்கிற சாஸ்திரமெல்லாம் அந்த சமயத்துக்கென்று விலக்கப்பட்டது. அன்றையதினம் நாராயணசாஸ்திரிகள் அவ்வூர் முழுதும் வரவழைத்து கற்கண்டு சர்க்கரை தாம்பூலம் எல்லாம் கொடுத்தார். பூவரசநல்லூருக்கும் இந்த சந்தோஷ சமாசாரத்தை காமேசுவரய்யருக்கு தந்திமூலமாய்த் தெரிவித்தார். அவர் இதைக்கேட்டு வெகு சந்தோஷமடைந்தார். தங்கத்துக்குத் தன் புருஷன் பரிக்ஷை தேறினான் என்கிற சந்தோஷத்தில் முகமலர்ந்து ஒருவித தேஜஸ முகத்தில் உண்டானது. தங்கம் திரண்டு இதற்குள் ஒரு வருஷகாலம் ஆய்விட்டபடியால் அவள் தேகம் மினுமினுப்பும் அவள் பாலயத்திற்குத் தகுந்த அழகும் பார்ப்போர்களைப் பிரமிக்கச் செய்தன. காமேசுவரய்யர் நாராயண சாஸ்திரிகளுக்கு இனி சாந்தி முகூர்த்தத்தை தாமதிக்கக்கூடாதென்று எழுதினார். நாராயணசாஸ்திரிகள் உடனே ஒரு முகூர்த்தத்தைப் பார்த்து காமேசுவரய்யருக்கு எழுதினார். அவர் உடனே சாந்தி முகூர்த்தத்திக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தார். சாந்தி முகூர்த்தத்துக்கென்று, நாலாயிரம் ரூ கடன் வாங்கினார். தன் வீட்டிற்கு வேறே பெண் இல்லை ஆதலாலும் தங்கத்திற்கும் விவாம் தெரிந்துவிட்டபடியால் அவள் மனம் கோணாமலிருக்கும்படி நடந்துகொள்ள வேண்டுமென்று காமேசுவரய்யர் தீர்மானித்தார். காமாக்ஷியம்மாளும்கூட சேர்ந்துகொண்டாள். காமேசுவரய்யர் ஆயிரம் ரூபாய்க்கு உத்தேசம் போட்டால் காமாக்ஷியம்மாள் அது போறாது 2,000. ரூபாய்க்கு உத்தேசம் போடவேண்டுமென்பாள். காமேசுவரய்யர் வெள்ளி சாமான் 1,000 ரூபாய்க்கு எடுத்துவிட்டார். கட்டில் மேஜை வகைராவில் 1,000 ரூபாய் போட்டுவிட்டார். மாப்பிள்ளை சீருக்கென்று ரூ 1,000 போட்டுவிட்டார். புடவை வகைரா செலவுக்கென்று ரூ 1,000. வைத்துவிட்டார். இதைத்தவிர பிரயாணச்செலவுகளை ஓர் கணக்காய் வைக்கவில்லை. காமேசுவரய்யர் அந்த ஊரில் ஒருவரையாவது ஊருக்குக் காவலாயாவது இருக்கும்படி வைக்கவில்லை. எல்லோரையும் கமலாவடிக்கு கூட்டிப்போய்விட்டார். வண்டிகள் ஜனங்களுக்காக

200 வண்டிகளும் சாமான்களுக்காக 100. வண்டிகளும் தயார் செய்யப்பட்டன. ஓர் ஊரே எடுபட்டுப்போகும்பொழுது வேடிக்கையை கேழ்க்கவும் வேண்டுமோ! கூடவே நாகசுரம் பாண்டு வாத்யம் எல்லாம் கொண்டுபோனபடியால் ஒவ்வொரு ஊர் பக்கத்தில் இவர்கள் போகும்பொழுது நாகசுரம் பாண்டு வர்த்யம் எல்லாம் வாசிக்கப்பட்ட படியால் ஒவ்வொரு ஊர் ஜனங்களும் வெகு கூட்டமாய் வந்து இந்த வேடிக்கையைப் பார்த்தார்கள். அஸ்தமிப்பதற்குள் ஏதாவதொரு இடத்தில் தங்கி ஓர் சமாராதனை நடக்கும். மறுபடியும் மறுநாள் காலையில் சாப்பாடு பண்ணிக்கொண்டு தான் மறுபடி புறப்படுவார்கள். இப்படி வழிநெடுகலும் மிக உல்லாசமாய் இருந்துகொண்டு எல்லோரும் புறப்பட நான்காம்நாள் கமலாவடி போய்ச் சேர்ந்தார்கள். கமலாவடியில் நாராயணசாஸ்திரிகளும் இவர்களுக்குத் தகுந்த ஏற்பாடு செய்துவைத்திருந்தார். இவர்களுக்கென்று வரிசையாக நாலு வீடுகள் பெரியவீடுகளாக ஒழித்துவிட்டார் நாராயணசாஸ்திரிகள். காமேசுவரய்யரைப் பார்த்து அந்தப்படித் தானும் நடந்துகொள்ள வேண்டுமென்றும் ஆனால் செலவு அதிகமாக ஆகக்கூடாதென்றும் யோஜித்து தன் பெண்ணின் கலியாணத்தையும் தன்பிள்ளை சாந்தி முகூர்த்தத்தோடு நடத்துவதாக நிச்சயித்து பெரிய கொட்டகைபோட்டு வெகு ஏற்பாடுகளெல்லாம் செய்துவைத்திருந்தார். ஆனால் அந்தப்பெண்ணுக்கு கல்லியாணம் நடக்க பிராப்தமில்லை. சாந்திமுகூர்த்தத்தினத்திலேயே கல்யாணமும் நடக்க வேண்டியதாயிருந்தது. சாந்தி முகூர்த்தத்திற்கு செய்யவேண்டிய வைதீக காரியங்களைச் செய்ய ஏற்பாடுசெய்துவிட்டு நாராயணசாஸ்திரிகள் பெண்ணின் கல்லியாணத்திற்கு ஏற்பாடு செய்யபோய் உட்கார்ந்தார். சமயத்தில் மாப்பிள்ளையைக்காணோம். மாப்பிள்ளை எங்கே எங்கேயென்று புரோகிதர்களெல்லாம் அலட்டினார்கள் மாப்பிள்ளையின் தகப்பனார் அவன் தலையை வலிக்கிறது என்கிறான். அச்சானியம்போல் உடம்பு ஸௌக்கியமில்லாத சமயத்தில் கல்லியாணம் செய்வது நியாயமில்லை யென்றார். இப்படி இருக்கும்போது வெங்கிடாமசாஸ்திரிகள் நாராயண சாஸ்திரிகளை தனியாக கூப்பிட்டு மாப்பளே சமாசாரத்தை கேட்டீர்களா. திருட்டுப்பயல்கள் வரதக்ஷிணை உங்களிடத்தில், 2,000. ரூபாய் அடித்துவிடப் பார்க்கிறார்கள். நீங்கள் கொடுக்கமாட்டேனென்று சொல்லிவிடுங்கள், எத்தனை பாசாங்கு பண்ணுகிறான். திருநெல்வேலியிலிருந்து ஒரு சப்ஜட்ஜி பெண்ணை கொடுப்பதாகவும், 5,000. ரூபாய் வரதக்ஷிணைகொடுப்பதாகவும் தந்தி வருகிறதாகச் சொல்லுகிறார்கள். இதெல்லாம் புரட்டு. அப்படித் தந்திவந்திருந்தால் நம்மிடம் சொல்லாமலல்லவா இந்தப் பயல்கள் ஓடிப்போய்விடுவார்கள் என்றார். நாராயணசாஸ்திரிகள் பிறகு மாப்பிள்ளையின் தகப்பனைக் கூப்பிட்டு என்ன ஐயா இது நியாயமாயிருக்கிறதா. ஏது இனிமேல் தாலிமுடிச்சு பாதிபோட்டுக்கொண்டிருக்கும்போதே மாட்டேனென்று போய்விடுவீர்கள் போலிருக்கிறதே. இதென்ன குழந்தை விளையாட்டாயிருக்கிறது என்றார். அவர் ஐயா நீர் கட்டாயப்படுத்தி என்ன செய்கிறது. என்பையனுக்கு உடம்பு சரியில்லை நான் என்ன செய்யட்டும் என்றார். நாராயணசாஸ்திரிகள், ஓய் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தால் ஜொரம் ஓடிப்போய்விடுமோ - ஜுரத்துக்கு வரதக்ஷிணை தான் மருந்துபோலிருக்கிறது இதெல்லாம் என்னிடத்தில் நடக்காது. இஷ்டமுண்டானால் கலியாணம் செய்துகொள்ளும் இல்லாவிட்டால் ஊர்போய்ச்சேரும். நான் ஒரு காசு தரமாட்டேனென்றார். அவர் என்ன அய்யரவாளா என் பிள்ளை உங்கள் பெண்ணின் கையையெல்லாம் பிடித்தபிறகா வேறுபுருஷனுக்கு உமது பெண்ணை கொடுப்பது என்றார். நாராயணசாஸ்திரிகள் என்ன ஐயா அதற்காக பயந்துகொண்டு நீர் என் சொத்து முழுவதும் கேட்டபோதிலும் கொடுத்துவிடுகிறதா. கையை பிடித்தால் என்ன. வெள்ளைக்காரர்களுக்குள் கடையில் மாம்பழம் நன்றாயிருக்கிறதா என்று கொஞ்சம் நறுக்கிகொடுக்கச் சொல்லி ருசிபார்த்து வாங்குவதுபோல் எத்தனை வெள்ளைக்காரர்கள் கல்லியாணத்திற்கு முன்னேயே ஒருமாசம் ½-மாசம் அனுபவித்துவிட்டு பிறகு வேறு பெண்களை தேடிக்கொண்டு போய்விடுகிறார்கள். அந்தப்பெண்ணும் இப்படி எத்தனைபேரிடம் அனுபவித்துவிட்டு கடைசியில் ஒருவனைக் கல்யாணம் செய்துக்கொள்ளுகிறது. இதெல்லாம் விட என் பெண்ணுக்கு என்ன கெட்டுப்போய்விட்டது என்றார். கடைசியில் மாப்பிள்ளையைச்சேர்ந்தவர்கள் நமது காரியம் இவரிடத்தில் பலியாதென்று கண்டு எல்லோரும் புறப்பட்டுப்போய்விட்டார்கள். ஊர் முழுவதும் நாராயணசாஸ்திரிகள் வீட்டுப் பிரஸ்தாபமாகவேயிருந்தது. எல்லோரும் நாராயணசாஸ்திரிகள் பெண்ணின் கையை மாப்பிள்ளை தொட்டதுதான் மிச்சம் என்று கேலி பண்ணினார்கள். காமேசுவரய்யருக்கு மனதில் நாராயணசாஸ்திரிகள் தங்கத்தின் கல்லியாணத்தின் போது பண்ணின போக்கிலித்தனத்துக்கு நன்றாய் வேண்டுமென்று தோன்றிற்று. மறுநாள் காலையில் கமலாவடி கிராமத்து ஆம்பராவதி நதியில் பெண்டுகள் ஸ்நானம் செய்துகொண்டிருந்தார்கள் அம்மாப்பொண்ணு என்பவள் நாமேரியைப்பார்த்து "என்னடியம்மா, வெங்கலக்ஷ்மி மாப்பிள்ளை தாலிமுடிச்சு பாதி போட்டிருக்கும்போதே மாட்டேனென்று ஓடிப்போய் விட்டானாமே" யென்றாள்.

நாமேரி—சீ. சீ. அரை பயித்தியமென்றால் முழு பைத்தியம் என்பார்கள். கல்லியாணத்திற்கு முன்னேயே மாட்டேனென்று சொல்லி ஓடிப்போய் விட்டார்கள் என்றாள்.

சேஷி.—இல்லையாமடி. மாப்பிளை பாதி கடிவரம் பண்ணிக்கொண்டிருந்தானாம். வரதக்ஷிணை இல்லை' யென்றானாம். அப்படியே எல்லோரும் கோபித்துக்கொண்டு புறப்பட்டுப்போய்விட்டார்களாம்.

காமேரி - என்னபுளுகடி - யாராவது பாதி சதடுமத்தில் போவாளா - வரதெக்ஷணை கேட்டா கொடுக்கமாட்டேன்னு போய்விட்டா.

சேஷி-எப்படியோ பொண்ணு மணையிலே பிள்ளையோடே உட்காந்து தோன்னுபோறது சாந்தி முகூர்த்தம் பண்ணிக்கொணடு ஓடிப்போய் விடலையே என்றாள். இதைக் கேட்டுக்கொண்டுவந்த வெங்கலக்ஷ்மி அம்மாள் ஏண்டி என் பெண் என்ன திரண்டுவிட்டாளா. சாந்தி முகூர்த்தம் பண்ணிக்கொண்டு ஓடலையே என்கிறையே—நீ சவறணையாயிருக்கிற கொழுப்பா இது என்றாள் எதார்த்தத்தில் வெங்கலக்ஷ்மி அம்மாள் பெண்ணுக்கு வெகுநாள் கலியாணம் செய்யாததால் பெண் திரண்டுவிட்டதாக ஊரில் பிரஸ்தாபம். சேஷி வெங்கலக்ஷ்மியைப்பார்த்து கோபித்துக்கொள்ளாதேயம்மா நான் ஒன்றும் வித்தியாசமாய்ச் சொல்லவில்லை என்றாள். அந்த சமயத்தில் நதிக்கு வந்த வேம்பு என்பவள் "வெங்கலக்ஷ்மி எது உனக்குகூட இத்தனைநாழிகை மாப்பிள்ளைக்கு உபசாரமெல்லாம் செய்துவிட்டுவா! தாமசமாச்சுதாக்கும்" என்றாள். வெங்கலக்ஷ்மிக்கு கோபம் வந்து "ஏண்டி வேம்பு நீ சவறணையாயிருக்கிற கொழுப்பா உன்னை இப்படி சொல்லச்சொல்லுகிறது" என்றாள். காமகிரி.—ஏண்டி வேம்பு, கல்யாணந்தான் நின்றுவிட்டதே உனக்கு தெரியாதா· என்றாள். வேம்பு அம்மா வெங்கலக்ஷ்மி கல்யாணம் நின்றுவிட்டது எனக்குத் தெரியாதம்மா. அதனால்தான் கேட்டேன் கோபித்துக்கொள்ளாதேயென்றாள். வெங்கலக்ஷ்மி அம்மாள் கோபம் என்ன உள்ளசாந்தம்தான் போய்விட்டது அவாவாளுக்கு வந்தாத் தெரியும் என்ன அதிசயமடி. மணையிலே உட்கார்ந்து பிறகு பெண்ணுக்கு கல்லியாணம் நடக்கமுடியாமற்போனா இது ஒரு கேலியா என்று சொல்லி அவசரமென்று வீட்டுக்கு போய்விட்டாள். இப்படி நாராயணசாஸ்திரிகளின் பெண்ணின் கல்யாணம் நின்றதனால் தங்கத்தின் சாந்தி முகூர்த்தம் இன்னும் சிறப்பாய் நடந்தது. கல்லியாணத்துக்கு சேகரிக்கப்பட்ட சாமான்களெல்லாம் சாந்தி முகூர்த்த கலியாணத்துக்கு உதவினபடியால் சாந்தி முகூர்த்தம் இன்னும் அதிக சிறப்பாய் விளங்கியது. காமேசுரய்யர் வாங்கிவந்த சீர்வரிசைகளை அந்த ஊரில் ஒவ்வொருவரும் வந்து பார்த்துவிட்டுப் போனார்கள். சாயங்காலம் நாராயணசாஸ்திரிகள் வீட்டிற்கு ஊர்வலம் போகும்போது சீர்வரிசை கொண்டு போகும் ஆட்களுக்கெல்லாம் ஒரேமாதிரி உடுப்புப் போட்டு சீர்வரிசையெல்லாம் ஒரு பந்தியாய் தெருவில்போன அழகைப்பார்த்துவிட்டு அந்தவூரில் எல்லோரும் இப்படிப்பட்ட சாந்தி முகூர்த்தம எப்போதும பார்த்ததே இல்லையென்று கொண்டாடினார்கள். படுக்குள் ஜோடனைக் கென்று காமேசுரய்யர் ஓர் கைதேர்ந்த பண்டாரத்தை கூட்டிப்போய் முழுவதும் புஷ்பங்களாலேயே அலங்கரித்து தேவேந்திரன் படுக்குள்போல் சிங்காரம் செய்துவைத்திருந்தார் அதைப் பார்த்த கிழவிகளுக்குகூட சிறுபெண்ணாயிருந்தோமா என்றிருக்கும்போது சிறுபெண்களுக்கு கேழ்க்கவும் வேண்டுமோ. சாந்தி முகூர்த்த லக்கினம் வருவதற்குள் புரோகிதர்கள் அவசரப்பட்டுக்கொண்டு ஸ்ரீநிவாசன் தங்கம் இருவரையும் பாலன்னம் சாப்பிடச்சொல்லி உள்ளே கொண்டுபோய்விட்டார்கள். உள்ளே கொண்டுபோய் விடுவதை இவ்வளவு பகிரங்கமாகச் செய்வது நமக்குள் எவ்வளவு கெட்ட வழக்கம் பாருங்கள். கெட்ட வழக்கம் என்று எல்லோருக்கும் தெரிந்திருந்தும் சபைகளில் கூடவே கூடாது என்று வெகு தைரியமாய் பேசுகிறார்களே தவிர அனுபோகத்துக்கு வரும்போது பழயகாலத்து கிழவர்களையும் கிழவிகளையும் மீறமாட்டாமல் அந்த துர்வழக்கத்தை அனுசரிக்கிறார்கள். ஸ்ரீனிவாசன் தங்கம் இவர்களை உள்ளே விடுவதற்கு முன்னேயே அவனுடைய அத்தங்கார் செல்லம் என்பவள் ஒருவருக்கும் தெரியாமல் கட்டிலின் அடியில்போய் வேடிக்கை பார்ப்பதற்கென்று ஒளிந்துகொண்டுவிட்டாள் கட்டில் அந்த அறையின் நடுவில் போடப்பட்டிருந்தது. தம்பதிகளை உள்ளே விட்டுவிட்டு எல்லோரும் வெளியே போய்விட்டார்கள். கதவு ஸ்ரீனிவாஸனால் மூடப்பட்டது தங்கம் முதல் முதல் தன் புருஷனோடு தனிமையாக விடப்பட்டபடியால் வெகு சங்கோசப்பட்டுக்கொண்டு கட்டிலின் ஓர் புறத்தில் மறைந்து நின்றுகொண்டிருந்தாள். ஸ்ரீனிவாசனுக்கு அவளைப் பார்க்க சங்கோசமாயிருந்தது. யார் முந்தி பேசுகிறது என்கிற சந்தேகம் இருவருக்கும் வந்துவிட்டது. ஸ்ரீவாசன் ஓர் பெண்ணை லக்ஷியம்செய்து நாம் வலுவில் போய் கூப்பிடுகிறதா என்று நினைத்தான். தங்கம் நாம் வலுவில் போனால் என்ன சொல்லுவாரோ புருஷன் என்ன செய்வாரோ என்று பயந்துகொண்டே நின்றாள். இப்படி வெகு நேரம் இருந்தபிறகு ஸ்ரீவாஸன் கிடக்கிறது நாம் தான் கூப்பிட்டுபார்ப்போம் ஒருவேளை வலுவில்வர சங்கோசமாயிருக்குமென்று நினைத்து எழுந்திருந்து ஸ்ரீவாஸன் மெள்ள தங்கத்தின் பக்கத்தில் போனான். தங்கத்துக்கு ஸங்கோசம் இன்னும் அதிகமாய்விட்டது. ஸ்ரீனிவாஸன் கட்டிலின் முன்புறமாக வரவும் தங்கம் பின்புறம் போய்விட்டாள். அவன் கட்டிலின் அகலப்பக்கத்துக்கு வந்தான். தங்கம் அதன் எதிர்பக்கத்துக்கு போய்விட்டாள் ஸ்ரீனிவாஸன் கட்டிலின் பின்பக்கம் போய்ச் சேர்ந்தான். தங்கம் கட்டிலின் முன்பக்கம் வந்துவிட்டாள். ஒருவேளை படுக்கையில் படுத்துக்கொள்ளலாமென்று போனாளோ என்று ஸ்ரீனிவாஸன் முன்பக்கம் வந்தான். தங்கம் பின்பக்கம் போய்விட்டாள். ஸ்ரீனிவாசன் இதென்ன ஆச்சரியமாயிருக்கிறதென்று பிரதக்ஷிணமாய்ச் சுற்றி தங்கத்தின் பக்கமாய் வந்தான் தங்கம் அப்பிரதக்ஷிணமாகச் சுற்றி பின்பக்கம் போய்விட்டாள். ஸ்ரீனிவாஸன் சுற்றச்சுற்ற தங்கமும கட்டிலை சுற்றிக்கொண்டே வந்தாள். இதுகளையெல்லாம் பார்த்திருந்த செல்லம் தன் சிரிப்பை என்ன அடக்கிப்

பார்த்தும் அடக்கமுடியாமல் கொல் என்று சிரித்தாள் ஸ்ரீனிவாஸன் இது யாரென்று பார்க்கவும் செல்லம் ஒளிந்திருப்பதை கண்டான். அது அவனுக்கு அவமானமாகப் போய்விட்டது. உடனே செல்லத்தை வைது வெளியில் துரத்தினான். அவள் வெளியில்போய் எல்லாரிடத்திலும் சொல்லிவிட்டாள். ஆனால் இவளைக் கண்டது ஸ்ரீனிவாஸனுக்கு ஒருவிதத்தில் சாதகமாயிருந்தது. தங்கம் இன்னும் சற்று ஒதுங்கிப்போவதை இவன் கண்டால் அவளை அடித்தேயிருப்பான். செல்லம் போன பிறகு நல்லவேளை இன்னும் ஏதாவது செய்கைகளை பாராமல் இதோடே போய்ச்சேர்ந்தாள் என்று நினைத்து மறுபடியும் கதவைத் தாள்போட்டான். தங்கம் தன் சங்கோஜத்தோடு இன்னும் யாராவது இருந்தாலென்னசெய்கிறது என்று மெள்ளச் சொன்னாள். ஸ்ரீனிவாஸனுக்கு இந்தப் பேச்சைக் கேட்க்க வெகு ஆனந்தமாயிருந்தது. அமிர்தம் உண்டவன்போல் தங்கத்தின் அந்தப் பேச்சைக் கேட்டு களித்தான். பிறகு கட்டிலுக்கு அடியில் எல்லாம் தேடிப்பார்த்து தங்கத்தினிடத்தில் போய் வேறு ஒருவரும் இல்லையென்று சொன்னான். அவள் செல்லம் எப்படி இங்கே வந்தாள், அது என் உங்களுக்குத் தெரியாமல் போயிற்று என்றாள். ஸ்ரீனிவாஸன் எனக்குத் தெரியாமலே ஒளிந்திருக்கிறாள் என்றான். இதற்குமேல் ஸ்திரீ புருஷர்கள் படுக்குள் இரகசியத்தை நமக்கு வெளியிட அதிகாரமும் இல்லை. ஸ்ரீனிவாஸனுக்கும் கோபம் வரும். இவ்விதம் தங்கத்தின் சாந்தி முகூர்த்தம் வெகு சிறப்பாய் முடிந்தது.

எஸ். இராமஸ்வாமி ஐயர். பி. ஏ

EXTRACT.

# அர்பத்னட் கம்பெனி முழுகிப்போனது.

## ஒரு கமிஷன் நியமித்து விசாரிக்கவேண்டும்.

அர்பத்னட் கம்பெனி முழுகிப்போனது மற்றக் கம்பெனிகள் முழுகிப்போவது போலல்ல. அது வெகுகாலமாகச் சென்னையில் ஸ்தாபிக்கப்பட்டு அதை நம் ஜனங்கள் ஒரு கவர்ன்மெண்ட் போலப் பாவித்து நம்பி வந்தார்கள். நம்பி வந்து இப்போது ஆயிரக்கணக்கான குடும்பங்கள் அழிந்து போயின. இந்தக் கம்பெனி முழுகிப்போயிற்றென்று கேட்டுத் திகிற்பட்டு நினைவு போனவர்கள் பலர்; பைத்தியம் பிடித்தது போலானவர்கள் பலர்; படுத்தபடுக்கையில் கிடப்பவர்கள் பலர்; இந்த இடி இடித்ததே, இனி பட்டினி கிடப்பதே கதியென்று மயங்குகிறவர்கள் பலர்; அனேக வருஷம் உத்தியோகஞ் செய்து சிறுகச்சிறுகச் சேர்த்துப் பாங்கியில் போட்டிருந்த ஆயிரக்கணக்கான தொகையை இழந்து இனி சம்பளமே கதி பென்ஷன் பெற்றால் எப்படி ஜீவிப்போமென்று பதைத்துக்கிடப்பவர்கள் பலர்; பென்ஷன்பெற்ற உத்தியோகஸ்தர்கள் தங்கள் ஆயுளெல்லாம் உழைத்து மிகுந்தபணத்தை இந்தப் பாங்கியில்போட்டு அதைத் திடீரென்று பறிகொடுத்து இனிப்பென்ஷனை வைத்துக்கொண்டு தங்கள் சமுசாரமென்ன, வண்டி குதிரைகளென்ன, வேலைக்காரர்களென்ன—இவர்களை யெல்லாம் எப்போதும் போலவே வைத்து சம்ரட்சிப்பதெப்படியென்று மயங்கிப் பதைத்திருப்பவர் பலர்; தங்கள் பெண் பிள்ளைகளுக்காகவும், புருஷனிழந்து நிர்க்கதியாய் விட்ட விதவைகளுக்காகவும் போட்டிருந்த சொற்பத் தொகையும்போய் அவர்களுக்கு ஜீவனோபாயம் எதுவும் இல்லாமல் மானத்தை யிழந்து பிச்சையெடுப்பதோ அல்லது மானத்துக்கும் பயந்து வீட்டிலேயே அடைபட்டு பட்டினி கிடப்பதோ கதியென்று இருப்பவர்கள் பலர்; பாங்கில் போட்டிருக்கும் தொகையின் வட்டிபோதும், நாம் எவ்வித தொழிலும் செய்யாமல் சுகஜீவியாயிருக்கலாமென்று நம்பிக் கவலையற்றிருந்த அந்தத்தொகையை இப்போதிழந்து இனி சுகம் போயிற்று, கற்ற தொழிலும் மறந்து போனோம், எப்படிக் காலந்தள்ளலாமென்று தெரியாமல் புத்திப் பிரமை கொண்டவர்கள் பலர்; தரும சாலைகளுக்கும் பொதுஜனவுபகாரமான ஸ்தாபனங்களுக்கு யாசகம் செய்தோ புண்ணியவான்களான பெரியோர் நன்கொடை கொடுத்தோ சேர்த்து அதன் பரிபாலனார்த்தமாக அதைப் பாங்கியில்போட்டு இத்தனை காலமாக அந்தத் தருமச்சாலைகளையும் ஸ்தாபனங்களையும் நடத்திவந்து இப்போது அவைகளின் சொத்துக்களிருந்த இடந்தெரியாமல் இந்தக் கம்பெனி வாயில் போட்டுக்கொண்டதால் இந்தத் தருமங்களையும் ஸ்தாபனங்களையும் இனி நடத்த ஒரு திட்டமுமில்லாமல் நிறுத்திவிடவேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டவை பல. இவ்வாறு ஆயிரம் பத்தாயிரமான குடும்பங்களைக்கெடுத்து நமது பணத்தை ஆங்கிலேயத் தோட்டப்பயிர் செய்வோருக்கும் மற்றப்படி வியாபாரத்தில் சம்பாதிக்கவும் செலவுசெய்து பாபராய்ப்போன இந்தக் கம்பெனி, எப்படிப் பாபராயிற்று, என்னவிதமாகச் செலவு செய்தது, இவர்கள் முழுதிலும் நாணயமாகவே பாங்கியை நடத்தினார்களா, இவர்கள் கணக்குகள் சரியாயிருக்கின்றனவா, இவர்களுக்கு இன்னும் எவ்வளவு சொத்து உண்மையாயிருக்கின்றன; கஷ்டமடைந்து நாசமாய்ப் போனவர்களுக்கு ஒன்றுக்குக்காலாவது திரும்பக்கிடைக்குமா, என்பன